# ஞானபோதினி

## ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்—திருக்குறள்.

சம்புடம் VI } 1902ளூ டிசம்பர்மீ 20உ. { இலக்கம் 5.

விஷயங்கள்.



பத்திராதிபர்:— { எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை, பி. ஏ.
வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.

சென்னை:
தாம்ஸன் கம்பெனியார்
பதிப்பிப்பது.

1902.

வருஷ சந்தா ரூ. 2—8—0. சஞ்சிகை ரூ. 0—4—0

# ஞானபோதினி

ஒரு மாதாந்தத் தமிழ்ப் பத்திரிகை.

சம்புடம் VI } 1902ஹு டிசம்பர்மீ 20உ. { இலக்கம் 5.


## CIVILIZATION.

### நாகரிகம்.

நாகரிகம் என்றால் என்னை ? இச்சொல் பல்லோர்களாற் பல விதமாக உபயோகிக்கப்படுகின்றது. இது 'நகரீ' என்றவட சொல்லினடியாகப் பிறந்தது. அதற்குப்பட்டணம் என்பது பொருள். இதனானே 'நாகரிகம்' என்ற சொல்லின் பொருள், பட்டணம் சம்பந்தமானது என்பதாம். அஃதாவது, பட்டணத்திலுள்ளவர்களுடைய நடையுடை பாவனைமுதலியவற்றின் தன்மையாம். இவ்வாறு சொற்பொருளேற்பட்டிருப்பதையுற்றுநோக்குமிடத்து இப்பொழுதத்துப்பலரு மெண்ணுமாறு, நகரவாசிகளிடத்திலேயே நாகரிகமுண்டு. மற்று, நாட்டுப்புறத்துக்கிராமவாசிகளிடத்தில் நாகரிக மிருப்பதில்லையென்பது ஏற்படலாம். மேலும், நாகரிகம் என்ற சொல்லைப்போலவே 'கிராமம்' என்றசொல்லினடியாகக் 'கிராமியம்' என்றசொல்லும் உண்டா யிருக்கின்றது. 'தாழ்ந்தவர் வழக்கம்' என்பதே யதன்பொருள். எனவே, நகரத்தார் உயர்ந்தவர்களும் கிராமத்தார் தாழ்ந்தவர்களுமாக முன்காலத்தில் மதிக்கப்பட்டிருத்தல்வேண்டும். அவ்வாறு முன்காலத்தார் மதித்த மதிப்பு நேரிதோ என்பதைப்பற்றியும் சிறிது விசாரிப்பாம்.

கிராமாந்தரங்களைக் காட்டிலும் பட்டணங்களில் வியாபாரம் அதிகமாய் நடப்பதனாற் பலவகைப்பட்ட மனிதர்களுடைய விருப்பங்களுக்குத்தகுந்தபடியெல்லாம் விதவிதமான பொருள்கள் வந்திறங்குகின்றன. ஜனங்கள் இனிதாகப்பொழுது போக்குவதற்கேற்ற விநோத சாலைகளும், பொருட்காட்சிச்சாலைகளும், நாடகசாலைகளும், பிரசங்கமண்டபங்கள் விளையாட்டிடங்கள் சித்திரசாலைகள் புகைவண்டி ஸ்தானங்கள் துறைமுகங்கள் முதலானபலவும் பெரிய நகரங்களிலிருக்கின்றன. அன்றிப், பல கிராமங்களிலுற்பத்தியாகும் பொருள்களும் இங்கே வந்து குவிகின்றன.

ஆதலால் நகரவாசிகளுக்கு மேற்கூறிய பலவற்றையும் பார்ப்பதனால் மனமகிழ்ச்சியுண்டாவதனோடு அவற்றைப்பற்றிய ஞானமுங் கொஞ்சங் கொஞ்சமாய் விருத்தியாகின்றது. அஃதொன்றுதானே? பலதேசத்து மனிதர்களும் பட்டணம் வந்துசேருவதனால் அவர்களைப்பார்த்து அவர்களுடைய நடையுடைபாவனை முதலியவைகள் தங்கள் மனத்திற்கேற்றவைகளாயிருந்தால் அவைகளைத் தாங்களும் மேற்கொள்ள விரும்புவார்கள் பட்டணத்தார். ஆகவே, நாகரிகவிருத்திக்கு வேண்டிய எல்லாவித அநுகூலங்களும் நகரவாசிகளுக்கேயேற்பட்டிருப்பதனாலும், கிராமவாசிகளுக்கு அவ்வளவு அநுகூலங்களேற்படாமையாலும் முன்னோர்கள் கொண்டமதிப்பு மிகவும் நேரிதேயென்க.

இஃதிவ்வாறாக, சிலர் நாகரிகமாவது சதா உடைகளை மாற்றிக்கொண்டு உலாவுவதென்றும், வேறு சிலர், எப்பொழுதுங் கொள்கைகளை மாற்றிக்கொண்டேயிருப்பதென்றும், இன்னுஞ்சிலர் சரீரத்திற் சில வேறுபாடுகள் செய்துகொள்வதென்றும், மற்றுஞ்சிலர் முன்னோர்களையிகழ்ந்துரைப்பதென்றும், இன்னும் பலவாகவும் தாங்கள் அர்த்தம் பண்ணிக்கொண்டிருப்பதாகத் தங்களுடைய நடையுடைபாவனைகளிற்காட்டி நடக்கின்றனர். இவர்களுடைய நடை நாடகங்களில் வேஷக்காரர்கள் வந்து நடிப்பதுபோலவிருக்கின்றதேயன்றி, வேறில்லை. இது நாகரிகமென்பதற்கு விபரீதார்த்தம் பண்ணிக்கொண்டு நடப்பதாகும்.

அப்படியாயின், ‘நாகரிகம்’ என்பதற்கு நேரியபொருள்தான் யாதோ? நாகரிகத்தின் முக்கியமாய அம்சங்கள் லோகசுபாவ

ஞானமும் நல்லொழுக்கமுமாம். பிறருடைய ஒழுக்கவழக்கங் களை யறிதலும், அறிந்து அவற்றுள் ஏற்றவைகளைக்கைக்கொண்டு மற்றவைகளைக் கைவிடுதலும், யாவரிடத்துங் கருணையுடையரியும் மரியாதையுடையராயும் நடந்துகொள்வதுமே நாகரிகத்தினியல் புகளாம். இப்பொழுதும் மரியாதையாகப் பேசத்தெரியாதவர் களைப்பலரும் 'நாட்டுப்புறத்தார்' அஃதாவது, நாகரிக மில்லா தவரென விகழ்ந்துரைப்பதைக் கேட்டிருக்கின்றோம்.

இது நிற்க, ஆசிரியர் திருவள்ளுவனார் 'கண்ணோட்டம்' என்ற, அதிகாரத்தின் கண்,

"பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

என்று கூறிய பாடலிற் போந்த 'நாகரிக' மென்ற சொல் லுக்குப் பரிமேலழகியார் கண்ணோட்டமென்று பொருளுரைத்தமை யுங்காண்க.

"புதல்வ னீன்ற பூங்கண்மடந்தை
முலைவா யுறுக்குங் கைபோற் காந்தட்
குலைவாய் தோயுங் கொழுமடல் வாழை
யம்மடற் பட்ட வருவித் தீநீர்
செம்முக மந்தி யாரு நாட
முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பி
னஞ்சு முண்பர் நனிநா கரிக
ரஞ்சி லோதியென் றோழி தோட்டுயி
னெஞ்சி னின்புறு யாயினு மதநீ
யென்க ணோடி யளிமதி
நின்க ணல்லது பிறிதியாது மிலனே"

என்ற நற்றிணை நானூற்றுச் செய்யுளிலும் நாகரிகமென்பது கண்ணோட்டப்பொருளிலேயே வழங்கியிருத்தல் காண்க.

இனி யெத்தேயத்தவராயினும் அவர்களிடத்திற் சிலாக்கியங் களுமுண்டு குறைகளுமுண்டு. முன்காலங்களிலேயே நம்முடைய தேசத்தவர் மிக்க நாகரிகமடைந்திருந்தார்கள். இது சரித்திர பூர்வமாகக் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தாலும் வெளியாகும். நம்மவர் விசேஷ நாகரிக முடையராயிருந்தபோது நாகரிகமே

யின்னதென்று தெரியாதவர்களா யிருந்த ஜாதியார்களெல்லாம் தங்கள் கண்ணைத்திறந்து காலக்கிரமத்தில் மெல்ல மெல்ல முன் னுக்குவந்து நாகரிகம்மிக்க ஜாதியாராகிய நம்மை நாகரிகமில் லாதவர்கள் என்று சொல்லத்தக்கவாறு உயர்ந்து விட்டனர். அப்படியிருக்க, நாம்மட்டில் நாகரிகநிலையில் உயராமல் முன்னி ருந்த ஸ்திதிக்குக் குறைவில்லையென்று சொல்லும்படி யிருப் பதிற்கேடுண்டாவதே யல்லாமல், நேற்றுயர்ந்த ஜாதியார் முன் னெல்லாந் தலைதாழ வேண்டியதாகவு மன்றோ இருக்கின்றது? ஆதலால் நாகரிக நிலையில் நாமும் உயரவேண்டுமானாற் செய்ய வேண்டியன என்னென்ன?

மரியாதையுள்ள நல்லொழுக்கமே நாகரிகத்திற்கு அடையா ளமாம். அது தொடங்கவேண்டியது நம்முடைய வீடுகளிலேயே ஆகையால், தீயவார்த்தைகளை நம்முடைய குழந்தைகள் கற்றுக் கொள்ளவொட்டாமல் தடுப்பது நாகரிகம்; வீடுகளைப் பரிசுத்த மாய் வைத்திருப்பது நாகரிகம்; வீண்செலவு செய்யாதிருப்பது நாகரிகம்; நம் கீழிருப்பவர்களை இம்சை செய்யாமலிருப்பது நாக ரிகம்; சாதியும் பிறப்பும் பற்றிப் பிறரை இழிவாகப்பேசாதிருப் பது நாகரிகம்; பெரியோர்களிடத்தில் வணக்க வொடுக்கமாய் நடந்து கொள்வது நாகரிகம்; நம்முடைய ஆசாரங்களிற் கேடு விளைக்கத் தக்கவைகளை உடனே நீக்குவது நாகரிகம்; கல்வியுடை யவர்களை மதிப்பது நாகரிகம்; சொன்னதைச்செய்து முடிப் பது நாகரிகம்; பயனில்லாத பழம் பொருள்களைக் கழிப்பது நாக ரிகம்; பயனுள்ள புதுப்பொருள்களை ஏற்றுக்கொள்வது நாகரி கம்; காலத்துக்கேற்றபடி அநுகூலமான புதிய வழக்கங்களை அநு ஷ்டிப்பது நாகரிகம்; விரோதமின்றி ஒருமித்து ஒத்துவாழ்வது நாகரிகம்; உண்மை தோன்ற வாதிப்பது நாகரிகம்; தன்னெஞ்சறி வது பொய்யாதிருப்பதும் நாகரிகம்.

ஆதலின், இவற்றையெல்லாம் சாதித்து முடிப்பதற்குத் துணை புரியத்தகுந்த முயற்சிகளி லெல்லாம் நாம் புகுந்து உழைக்கவேண் டியது நம்முடைய கடமையாகும்.

பத்திராதிபர்.

கொன்றும் தங்கள் பசியைத் தீர்த்துக்கொள்ள முயலாது ஒழியார். பிறகு சிறிது சிறிதாகப் பரிதாப உணர்ச்சி வேட்டையாடச் சக்தியில்லாதவர்களாய கிழவர்களைத் தவிர்த்து மற்றையோரிடத்து உண்டாகின்றது. இத்தகை மனிதரை மனிதர் கொன்று தின்னும் தன்மை நெடுநாள் தங்கியிராது. ஆகையால், ஒவ்வொருவரும் உணவைத்தேடிச் சேர்த்து வைத்துக்கொள்ள முயல்கின்றனர். கஷ்டப்பட்டு உணவைச் சம்பாதித்துப் பின்னர் வேண்டியதற்குக் காப்பாற்றிக்கொள்ளும்திறமையும் மிருகங்களைவிட இவனுக்கு மேன்மையான புத்தியிருக்கின்றமையின் உண்டாகின்றது.

இரண்டாவது, ஸ்திரீ சம்போக ஆசை :---எப்படிப் பசி தன்னுயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் திறமையை உண்டுபண்ணுகின்றதோ அப்படியே உயிரை உற்பவித்துக்கொள்ளும் சக்தி பால்பேதம் உண்டுபண்ணுகின்றது.

மிருகங்களிடத்தெல்லாம் ஆண் பெண் இரண்டும் சில சமயத்து இடைச்சம்பவமாகவும், நீடித்த சம்பவமாகவும் இருக்கின்றன. இடைச்சம்பவமானது அதிக வருத்தமின்றி குழந்தைகளைப் பெறுமவற்றுள் நிலைநிற்கின்றது. நீடித்த சம்பவமோ அதிக வருத்தத்துடன் குழந்தைகளைப் பெறுமவற்றுட் குடிகொண்டிருக்கின்றன.

குழந்தைகளை நெடுங்காலம் பாராட்டிக் காப்பாற்றவேண்டியதாயிருந்தால் அச்சாதி ஜந்துக்களிடத்து ஆண்பெண் இரண்டும் நீடித்து ஒன்றுசேர்ந்திருக்கும் ; ஏனெனின், சில ஜாதி ஜந்துக்களிடத்துத் தாய்தந்தை காப்பாற்றுதலின்றி வளரக்கூடிய குழந்தைகளை உற்பத்தி செய்கின்றன என்பதும், மற்றவைகளில் அவை முக்கிய மென்பதும் வெளியாகின்றன.

எப்பொழுது தாய்தந்தை காப்பு ஜந்துக்களுக்கு வேண்டுவதில்லையோ, அப்பொழுது அவைகள் கணக்கில்லாதன உற்பத்தியாகி அவைகளுள் அநேக மழிந்து சிலவே தப்பிப்பிழைக்கின்றன. இவ்விஷயத்தைப் பாம்பு, பல்லிமீன் இவைகளுக்குட் காணலாம். ஆனால், மனிதனிடத்தும் உயர்ந்த ஜாதி வானரங்களிடத்தும் குழந்தைகள் மிகவும் சிலவே உற்பவிக்கின்றன. ஒரு சமயத்து ஒரு தாயிடத்து ஒரே பிள்ளை உண்டாகின்றது. அப்பிள்ளையின் இளம் பருவம் நீடித்து நிற்கின்றது. முக்கியமாய் மனிதனிடத்து இதைக் காணலாம். இவ்வாறு குழந்தைகளைக் காப்பாற்றற்கு ஒரே ஆணும் ஒரே பெண்ணும் ஒன்றுசேர்ந்து இருக்கவேண்டியது முக்கியமாம். இவ்விதம் ஒன்றுசேர்ந்து சிறிது நீடித்திருத்தலைத்தான் விவாகம் என்று ஒருவாற்றாற் சொல்லவேண்டியிருக்கின்றது. விவாகம் என்பது தன்னுடைய ஜாதி நீடித்து வாழ்தற்கு ஒன்று கூடும் கூட்டந்தான். சிலர் தம்முடைய குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காக ஒன்று சேர்வதை மணம் எனகிறுர்கள். எப்படியாயினும் தம்முடைய குழந்தைகளுக்காக ஆணும் பெண்ணும் நீடித்து ஒன்றுசேர்ந்திருப்பது தேற்றம்.

ஆதி மனிதரிடத்து இவ்வகைக் கூட்டம் பலவகைப்பட்டு விளங்கிற்று. ஒரு மனிதனும் ஒரு ஸ்திரீயும் கூடும் கூட்டம், ஒரு மனிதனும் இரண்டு அல்லது அநேகஸ்திரீகளும் கூடும் கூட்டம், இரண்டு அல்லது மேற்பட்ட மனிதர்களும் ஒரு ஸ்திரீயும் கூடும் கூட்டம், இரண்டு அல்லது மேற்பட்ட புருஷர்களும் இரண்டு அல்லது மேற்பட்ட ஸ்திரீகளும் கூடும் கூட்டம் என நால்வகை விவாகமெனப் பொதுப்படக் கூறலாம்.

மனிதர்கள் வானர ஜாதியைப்போல ஓர் ஆணும் ஓர் பெண்ணும் அல்லது ஓர் ஆணுக்கு இரண்டுமூன்று பெண்ணும் ஒன்று சேர்ந்து வாழுந்தகைமையை மேற்கொள்வனவன்றிப் பின்னர்க் கூறிய இருவகைக் கூட்டமுங் காணுதலரிது. ஏனெனின் தாய்முலையுண்டு ஜீவிக்கும் ஜந்துக்களில் ஸ்திரீயினும் புருஷனே வலியுடையவனாகக் காணப்படுகின்றனன். இயற்கையில் நாலைந்து புருஷரும் நாலைந்து ஸ்திரீகளும் அவரவர் இஷ்டப்படி ஒன்று சேர்தலைக் காணுதலரிது. ஏனெனில், புருஷனிடத்துப் பொறாமைக்குணமும் சச்சரவிடுந்தன்மையும் தங்கள் தங்கள் ஸ்திரீகளைப் பிறன் அபகரியாது இருக்கவேண்டியத நிமித்தம் உண்டாகின்றன. மேலும் இந்துக்களுடைய மணங்களில் ஒரு புருஷன் ஒரு ஸ்திரீயையும், ஒரு புருஷன் இரண்டு மூன்று ஸ்திரீயையுமே மணஞ்செய்து கொள்ளுகின்றான். இதுவே, முற்காலந்தொட்டு வழங்கிவருகிறதொன்று மனு முதலியவர்கள் முறையிடுகின்றனர்.

(இன்னும் வரும்)

சருக்கை - இராமசாமி ஐயங்கார்.

---

## THE MUSICAL SENSE IN ANIMALS.

## பிராணிகளின் இசையுணர்ச்சி.

இப்போது உலகத்திலுள்ள பிராணிவருக்கங்களெல்லாம் கடவுளாற் சிருஷ்டிக்கப் பட்டனவாமென்று கொள்ளாமல் ஒருவகை ஜந்துக்களினின்றும் வேறுவகை ஜந்துக்கள் படிக்கிரமமான மாறுபாடு அல்லது உருவத்தின் திரிபினு லுண்டாயின என்பதே உயிர் நூலோரது கொள்கை. ஒரு ஜாதி ஜந்துவினின்றும் வேறு ஜாதி உண்டாகாது என்று அவர் தாமே கூறுதற்கு இது மாறு ஆகாதோ எனின் ஆகாது. என்னவென்றால், ஒரே தலைமுறையில் வேறு பாடுகள் உண்டாகாமல் அநேக தலைமுறைகளில் உணரமுடியாத திரிபுகள் சிறிது சிறிதாக உண்டாகிக் கடைசியிற் புதுமையான ஒருவருக்கம் தோன்றுமென்பதையே மேற்குறித்தோம்.

இவ்வகைமாறுபாடு இயற்கைப்பிரிநிலை என்னும் நியமத்தினாலுண்டாகிறது. அஃதாவது சாதாரணமாகப் பிறப்பவைகளிற் சிலவே உயிருடனிருந்து தம் ஜாதியை விருத்தி செய்கின்றன. இது 'பெற்றவெல்லாம் பிள்ளையாமா? நட்டவெல்லாம் பயிராமா?' என்ற பழமொழியை வற்புறுத்துகின்றது. மற்றவை பகைவராலும், சீதோஷ்ண ஸ்திதியின் மாறுபாட்டினாலும் பசிதாகங்களினாலும் மடிகின்றன. பிழைத்தவைகள்தாம் வாழ்க்கைப்போரில் வெற்றி பெற்றிருப்பவை. அவ்வாறு உயிருடனிருக்கும் ஜந்துக்களில் இரண்டேனும் ஒற்றுமையுடையனவாயிரா. இதுபற்றியே பத்திரப்பதிவு செய்யும் நியாயஸ்தலங்களில் கட்டைவிரலின் கோடுகளை மைதொட்டுப் பதிப்பித்துக் கொள்ளுகின்றனர். ஒருவருடைய கைக்கோடுகள், வேறு எவருடைய கைக்கோடுகளுடனும் ஒத்து இரா. ஆகையால் அதுபோலச் சிற்சில விகற்பங்கள் ஒரேஜாதி ஜந்துக்களிடத்தும் இருக்கின்றன. இப்பேதங்கள் அதிகரித்தாற் சில சமயங்களில் அவை தம்வாழ்க்கைக்குப் பயன்பட்டும், மற்றசமயங்களிற் பயன்படாமலும் இருக்கின்றன. இறவாமல் வாழ்ந்திருப்பதற்கு இன்றியமையாத திரிபுகள் ஜாதி விருத்திக்குங் காரணமாகும். அவை கூர்மையானபுத்தி, பருத்து நெருங்கியுள்ள மயிர்களையுடையதோல், விரைவாக ஓடுதல், பறத்தல் முதலியன. இக்குணங்கள் தலைமுறைகளிலதிகரித்து, அநேக ஆண்டுகள் கழிந்த பின்பு சம்பூரணத்தை அடையும்போது, தேசத்திற் சில இடங்களில் மாறுபாடாகி வேறு ஜாதி என்று நம்மாற் பிரிக்கப்படும்படியான தன்மையையை அடைவிக்கின்றன. இவ்வகைக் குணங்களையுடைய ஜந்துக்களை மற்றவைகளினின்றும் உயிர்த்திருக்குமாறு பிரிக்கும் இயற்கையின் தன்மையை இயற்கைப்பிரிநிலை என்பர்.

இஃதன்றியும் வேறுவகைப்பிரிநிலை உலகத்திலுண்டு. அதை ஜாதிப்பிரிநிலை யென்று * டார்வின் பண்டிதர் கூறுவர். இதனை உதாரணத்தால் விளக்குவோம்.

மாலைப்பொழுதிற் புற்கள் நிறைந்த வெளியிடங்களில் ஒருவகை ரீங்காரம் சிலசமயத்தில் உயர்ந்த தொனியுடனும், சில சமயத்தில் இன்பம் தரவல்ல மத்திமமான குரலுடனும் ஒலித்தலை நாம் எல்லோரும் அநேகமுறை கேட்டிருக்கின்றோம். இது தத்துக்கிளியினது பாட்டு. அதன் பின்னங்கால்கள் இறகுகளின்மீது உராய்வதனால் இவ்வகை இசை உண்டாகிறது. இந்த நாதம் செய்யவல்ல திறமை ஆண் தத்துக்கிளி இடத்திலேயே உள்ளது. இவ்வகைத்திறமை ஆண் தத்துக்கிளியிடத்துமட்டில் உண்டாகவேண்டிய காரணம் என்ன? ஸ்திரீகளை வசீகரித்துத் தாம் தாம் அடைவதன்பொருட்டுப் புருஷர்களுக்குள் உண்டாகும் விவாகமடியாக இந்த வல்லமை முதலில் உற்பத்தியாயிற்று. அஃதாவது இசையினால் ஸ்திரீகள் திருப்தியடைந்து இனிய

* Darwin

குரலுடன் பாடவல்ல ஆடவர்களைத் தமது நாயகர்களாகக் கொள்ளுவார்கள் என்பது.

பட்சிகளிடத்தே இதை நன்றாய் அறியலாம். அழகும் இனிய குரலு முடையவை ஆண் பறவைகளே. தங்கள் ஜாதியை அபிவிர்த்தி செய்வதற்கு வருஷத்தில் ஒரு முறை பெண்பட்சிகள் தாம் தாம் விரும்பும் ஆண்களைத் தேடிக்கொள்ளும். ஒவ்வோர் ஆடவனும் அழகிய ஸ்திரீயை அடைவதற்கு விரும்புகின்றான் என்பது மனிதர்களிடத்திற்றான் என்பதில்லை. சகல ஜந்துக்களிடத்தும் உள்ளது. பெண்களும் அம்மாதிரியாகவே அழகிய புருஷனை அடைய விரும்புகின்றார்கள். ஆகலால், அழகில்லாத பெண் அழகிய ஆடவனையும், அழகியபெண் அழகில்லாத ஆடவனையும் அடைவது அசாத்தியமாகின்றது. அவ்வாறு அடையும் பக்ஷத்தில் வனப்பைத்தவிர வேறு எவ்வித விசேஷ குணங்களேனும் அதனதனிடத்திற் பொருந்தியிருக்க வேண்டும். அக்குணங்கள் இனியகுரல் விசேஷ வல்லமை முதலியன,

அழகிய ஒரு பெண்குயிலும் அநேக அழகிய ஆண்களும் இருப்பின் பின்னர்க் கூறியவைகளின் குரல்களை எல்லாம் கேட்டு எக்குயிலிசை இனிதாயிருக்கின்றதோ அக்குயிலை மேற்கூறிய பெண் சேர்த்துக்கொள்ளும். அன்றியும் அழகும், பெண்பட்சிகள் கவனிக்கும் விஷயமே. பட்சிகளைப்பற்றித் தெரிந்தவர்களை விசாரித்தால் ஆண் பறவைகளே அழகுடையன என்பது நன்றாக விளங்கும். நீண்ட தோகைகளையுடைய மயிலும், இன்பந் தரும் வர்ணங்களையுடைய கிளியும், களிப்பையுண்டாக்கும் மொழு மொழுப்புடைய மைனாவும் ஆண்பறவைகளே. சிலசமயங்களிற் பறவைகள் தம் சிறகுகள் கலைந்துபோனால் பின்புறத்திலுள்ள எண்ணெய்க்குச் சமானமான ஒருவிதக் கொழுப்பை மூக்காகிய சிப்பினால் எடுத்து அவைகளை வாரிக்கொண்டு விளங்குவதை எல்லோரும் பார்த்திருக்கிறோம். இச்செய்கை அதன் அழகை விருத்திசெய்கின்றது.

ஆதலின், அழகிய ஸ்திரீயை அடைவதற்கு அழகுடன் இனிய இசையுடைமையும் இன்றிமையாததா யிருக்கின்றது. இவ்வகைப் போரினால் இசைப்பயிற்சி கிரமமாகப் பரம்பரைதோறும் அதிகப்படுகின்றது. இதற்குக் காரணம் ஸ்திரீ புமான்களை யடைவதற்கு முன்னருண்டாகும் கஷ்டங்களே.

மனிதனிடத்து இசையைக் கேட்டறியு முணர்ச்சியும், பாடுந் தன்மையும் எவ்வாறு உண்டாயதென்பதை ஆராய்வாம்.

இதர மிருகங்களைப்போல மனிதனும் உலகத்திலுள்ள சில மாறுபாடுகளுக்கு உட்பட்டே நடக்கிறான். சந்தேகமில்லாமல் மாறுபட அறிவு முற்காலத்தினும் இக்காலத்தில் அதிகரித்திருக்கிறது. ஆனாற் காளிதாசனைப் போன்ற நாடகக் கவிகளும், கம்பனைப்போன்ற பாவலர்களும் இக்காலத்துக் காணப்படவில்லையே எனின், அறிவினுடைய நுட்பத்தைப் பரிசோ

திக்கும் விதம் பெரும்பான்மை யாவராலு மறியப்படவில்லை. சில சமயத்திற் சில விஷயங்களில் உயர்ந்த வித்துவத்திறமையும், பொது அறிவும் சிலரிடத்து மிகுந்திருத்தலைக் காணலாம்

மனிதனிடத்து அறிவிலும் நுட்ப உணர்ச்சியிலும் மேம்பாடுண்டானது இயற்கைப் பிரிவினால். ஏனெனின், மனிதன் வீடுவாசல்களின்றி மிருகங்களைப்போலக் காடுகளில் வசிக்கும்போது, புஜவலி எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு அறிவு ஒருவகைப்படையாக விருந்தது. உதாரணமாக, வேட்டையாடி அடையும் இரையினையே நம்பிப் பிழைத்திருக்கும் ஒரு வம்சத்திற் கூர்மையான இந்திரிய ஞானமும், தேகபலமும் எவ்வகைத் துயரத்தையும் அனுபவிக்கும் பொறுமையும், வேட்டையாடுவதில் தந்திரமும், தைரியமும், பகைவர்களை ஒன்று சேர்ந்து எதிர்க்கும் ஒற்றுமையும், உணவு கிடையாத காலங்களிற் பசியினால் வருந்தாமலிருக்கும் பொருட்டு ஆகாரம் தேடிக்கொள்ளு முணர்ச்சியும் இன்றியமையாதன. இக்குணங்களையுடைய குடும்பங்களே தம் சந்ததியை யபிவிர்த்திசெய்யும். இவ்வகை லக்ஷணங்கள் வர வர ஆண்டுகள் தோறும் அதிகரித்தால் மானுடருடைய பொது அறிவு மிகுதியாகிப் பரம்பரைதோறும் கதா ரூபமாக முன்னோர்கள் செய்கைகளெல்லாம் பரவி மேற்கூறிய பண்புகளெல்லாம் பின்னோர்களுக்குச் சாதாரண குணங்களா யமைகின்றன.

சங்கீதம், கலை, செய்யுள், கணிதசாஸ்திரம் முதலியவைகளிற் சாமர்த்தியமும், மனோசக்தியும், மாந்தரிடத்து உண்டான காரணத்தை விசாரித்தால் அவை இயற்கைப் பிரிவினையால் உண்டாகவில்லையென்பது ஏற்படுகின்றது. இராக ஞானமும், அணிநலமிகுந்த செய்யுள் செய்யும் வல்லமையும், முற்காலத்தில் ஒரு வம்சத்தவரை வாழ்க்கைப்போரில் நீடித்திருக்கும்படி செய்யாது என்பது பலர்க்குமுற்றதுணிபே. இக்காலத்திலே அப்படியில்லை. சங்கீதப்பயிற்சியுள்ள பாகவதர்கள் ஸ்திதியையும், சாஸ்திரப் பயிற்சியுடைய மற்றவரது நிலைமையையும் ஒப்பிட்டுப்பார்த்தால் மேற்கூறியதுநன்றாய் விளங்கும். மேலும் வேதாந்த ஞானமுடையவர்களைப் பார்க்கிலும் விஷய சம்பந்தமான நூல்களைக்கற்றவர்களே அர்த்தசித்தி அடைவதற்கு மிகுந்த சந்தர்ப்பங்களையுடையவர்களாவார்கள் என்பது நாமெல்லோரும் அறிந்தவிஷயமே. சங்கீதஞானமும், கலைப்பயிற்சியும், கவித்திறமையும், கணிதசாஸ்திரத்திற் சாமர்த்தியமுடைமையும், மானுடர்களை வாழ்க்கைப்போரிற் காக்க மேற்குறித்தபடி சக்தியற்றனவாதலால் அவை இயற்கைப்பிரிவினையினால் உண்டாகவில்லை என்பது நிச்சயம்.

கத்துக்கிளிகளிடத்தும், பறவையினிடத்தும், இசையுணர்ச்சி ஜாதிப் பிரிவினையினால் எப்படியுண்டாயிற்றோ, அப்படி மானுடரிடத்து முண்டாயிற் றென்றார் டார்வின் என்பவர். நம்மவர்களைப் போலாது தாய்தந்

தையர்களுதவியின்றி ஆங்கிலரும் மற்றை ஜாதியாரும் தாம் பிரியப்பட்ட பெண்ணையே கலியாணம் செய்துகொள்ளுவது வழககம். இது நம்மவரது காந்தர்வ விவாஹத்தைப் பெரும்பான்மை ஒத்திருக்கின்றது. அங்ஙனம் விவாஹம் செய்துகொள்வதற்கு முன்னால் ஒரு புருடன் ஒருஸ்திரீயினிடத்து அநேகமுறைசென்று அவள் குணத்தைத்தான் அறிந்துகொள்வதே யன்றித் தன் குணகுணங்களையும் அவளுக்கு அறிவித்து, இருவரும் மனமொப்பிய பிறகு கலியாணம்செய்துகொள்வான். இவ்வகைச் சந்திப்பிற் சில சந்தர்ப்பங்களில் தான் குறித்த காதலியின் மனத்தைக் கவரும்பொருட்டுச்செய்யும் வித்தைகளிற் சங்கிதமும் ஒன்று. எதற்கு உருகாதவனும் இசைக்குருகுவான் என்பதற்குச் சமானமாய்ச் சங்கீதத்தாற் பெரும்பான்மையும் பெண்கள் திருப்தியடைவார்கள். ஆதலால், இசையுணர்ச்சி ஜாதிப்பிரிவினையினால் உண்டாயிற்றென்பது ஒருவாறு ஸ்தாபிக்கப்படுகின்றது.

ச. பட்டாபிராமன்.

---

## SOCRATES.

## ஸாக்ரடீஸ்.

ஸாக்ரடீஸ் என்பவர் ஐரோப்பா கண்டத்தின் தென்பாகத்தில் விளங்காநின்ற க்ரீஸ் நாட்டின்கணுள்ள பிரசித்தி பெற்ற நகரங்களுட் சிறப்பு வாய்ந்த ஆதன்ஸ் நகரத்திற் சிற்ப சாஸ்திரியாயிருந்த ஸோப்ரோனிஸ்கஸ் (Sophroniscus) என்பவர்க்கும் மருத்துவத்தொழில் நடாத்திவந்த பிணரெட் (Phænerete) என்னும் மாது சிரோமணிக்கும் புதல்வரா யுதித்தார். இவர் இப்பூவுலகிற்றோன்றிய ஆண்டு இஃதென வரையறுத்துச் சொல்ல முடியாது கி. மு. 471 க்கும் கி. மு. 469 க்கும் மத்தியகாலமா யிருக்க வேண்டுமென்று தத்துவ சாத்திரத்தேர்ச்சி பெற்றோர் யூகிக்கின்றனர். இவர் இளம்பருவத்தில் தமது தேசாசாரப்படி தேகப்பயிற்சியிலும் சங்கீதத்திலும் சிறிது காலங்கழித்து வந்தனர். ஆனால் தமக்கு வயது முதிர முதிரக் காலத்தின் அருமையையும் அரிய மானிடப்பிறவியின் பலனையும் நன்கோர்ந்து மேற்கூறிய ஆசாரங்களை அனுஷ்டிப்பதிலே தம் வாணாளை வீணாளாக்கப் பிரியமிலராய், வானசாத்திரம் இரேகாகணிதம் என்பவற்றில் தம் மனத்தைச் செலுத்துவதிலும், தம் ஜென்மநாடாகிய க்ரீஸில் தமக்கு முன்னிருந்த தத்துவ சாத்திரிகளுட் பெருமை வாய்ந்தோர் வெளிப்படுத்திய பிரமாணங்களையும் கோட்பாடுகளையும் வாசிப்பதிலும் மிக்க ஆர்வங் காட்டிவந்தனர். இவர் தம்முடைய வாணாளின் முதற்பாகத்தைத் தம் தந்தையின் தொழிலாகிய சிற்ப வேலையிலேயே செலுத்தியதாகச் சொல்வதுண்டு ; இக்கூற்

றுக்கத்தாட்சியாக, ஆக்ராபொலீஸ் (Acropolis) என்பதற்கும் க்ரீஸூக்கும் மத்தியிலுள்ள இடத்திலே கி. பி. இரண்டாம் நூற்றுண்டிற் சில கற்பிரதிமைகள் கண்டுபிடிக்கப்பட்டனவென்றும், அவை இவராற் செய்யப்பட்டனவென்றும் சொல்லப்படுகிறது. இஃது உண்மையாயிருப்பினும் இராவிடினும், இவர் அதிசீக்கிரத்தில் இத்தொழிலை விடுத்து, தமக்கு ஒரு தெய்விக ஆக்ஞை பிறந்திருக்கிறதென்றும் அவ்வாக்ஞையின் உண்மையைத் தாம் கனவு முதலிய பல்வகையான குறிகளாலுணர்ந்தாரென்றும், அதன் சாராம்சமானது மானிடப்பிறவி யடைந்துள்ள சர்வ ஜனங்களுக்கும் தாம் ஒரு கோட்பாட்டை யுபதேசித்து அதன்வழி அவர்களை உய்யசுமாறு செய்வதன்றென்றும், அவர்களுக்குத் தெரிந்தன சிறிதும தெரியாதன அதிகமுமாயிருப்புழித் தெரியாதனவற்றையுந் தெரிந்தசாப்பாவித்து மதிமோசம் போகும் மனிதர்களை அங்ஙனம் போகாது தப்புவிப்பதே யென்றுங்கூறினர். இன்னணம் அவர்களை நல்வழியிலுய்ப்பதனுல்அவர்களுடைய உணர்ச்சித்திறத்தையும் சன்மார்க்கத்தையும் விருத்தி செய்வதற்குரிய பெருஞ்சாதனமா யிருக்கக்கூடுமெனக் கருதினர். இத்தொழிலை அவர் புரியுங்கால், ஆதன்ஸ் நகரிற் பிறந்து இவர் காலத்திற் சிறப்போடு விளங்கியிருந்த அநேக தத்துவ சாத்திரிகளும் இவருடன் மிக்க விநயத்துடனும் அன்புடனும் ஒழுகுவாராயினர். தம் நாட்டவர்கள் யாவர்க்கும் நன்கு தெரிந்தவராயு மிருந்தனர். இத்தகைய பெருங்கருமத்தைப் புரிவதே தம்முடைய பிறவியின் பலனெனக் கருதியிருந்த இப்பெரியோர்க் கில்லறத்தினுல் யாதோர் இன்பமுமின்றிப் பெருந்துன்பமே விளைந்திருந்த தென்பதை நோக்குமிடத்து அது விசனிக்கத்தக்கதாயிருக்கிறது. இது நிற்க,

**தொழில்.** இவர் மேற்கூறிய தேவகட்டளையை நிறைவேற்றுவதிலேயே தங்காலத்தின் பெரும்பாகத்தைச் செலவழித்ததாகச் சொல்லப்படினும், இராஜாங்க காரியங்களில் ஊக்கங்குன்றிலரென்பது தெரியவருகிறது. இவர் காலத்தில் கிரீஸ் நாட்டின் தலைநகராய ஆதன்ஸ் நகரத்தில் ஹாப்லைட்ஸ் (Hoplites) என்னும் நாமம் பூண்ட ஒரு காவற்படை திரட்டப்பட்டிருந்தது. அப்படையில் இவரும் ஒருவரா யிருந்தாரென்றும், அப்பொழுது க்ரீஸ் சரித்திரத்திற் பிரசித்தியடைந்ததாகக் கூறப்பட்டிருக்கும் ஆல்ஸிபியேடிஸ் (Alcibiades) என்பவர்க்கு டீலியம் (Delium) என்னும் பட்டணத்தில் கி. மு. 424-லும், ஆம்பிபோலிஸ் (Amphipolis) என்னும் பட்டணத்தில் கி. மு. 422-லும் நேர்ந்த பெருவிபத்துக்களினின்றும் அவரைத்தப்புவித்துத்தம் நாட்டாருட் பிரக்கியாதி யடைந்தாரென்பதுஞ் சொல்லப்படுகிறது. க்ரீஸ் நாட்டிற் பிறக்கும் ஒவ்வொருவரும் ஒழுகவேண்டிய முறைமைப்படி ஒழுகி, தம்ஜென்மதேசத்தாரே தம்மைப்புகழப் பெற்றிருந்தும், இராஜாங்க காரியங்களில் உன்னதநிலைமையை அடையவேண்டுமென்ருவது பெருங்கீர்த்தியை நாட்டவேண்டுமென்ருவது கருதினரல்லர். மேற்கூறிய கட்டளையினிமித்தம் தாம் அத்

தொழிலினின்றும் நீங்குவது இன்றியமையாததென நம்பியிருந்தார். இராஜ்ஜியம் நடாத்துவதிற் பிரவேசித்தால் தம்முடைய தெய்விகத்தொழிலானது நிறைவேருதென்றும், அதனால் தெய்வ ஆஜ்ஞையை மீறி நடக்கும் குற்றத்துக்குட்பட்டவராவாரென்றும் கருதினர் போலும். ஆயினும், தாம இராஜாங்ககாரியங்களிற் செலுத்திய சிறிது காலத்திற்குள் இவர் செய்துள்ள பெருங் காரியங்களை இங்கெடுத்துரைப்பது அவசியமாகும். கி. மு. 406-ஆம் வருஷத்தில் இவர் ஆதன்ஸில் இராஜ்ஜிய பரிபாலனம் புரிந்து வந்த பல சங்கங்களுளொன்ருகிய ஸெனேட் என்னும் பிரதான சங்கத்தின் அங்கத்தினரா யிருந்தனர். இவ்வவயவியாயிருப்புழித் தம் உடனவயவிகளாகிக் கல்விச் செல்வத்தைச் சிறிதேனும் பெருது வெறுக்கைச் செல்வத்தையே பெற்றுள்ள மூடர்களுடைய கொள்கைக்குத் தாம் இணங்காது, செல்வ முதலியவற்ருல் அவர்க்குண்டாம் அந்தஸ்துக்கும் அவர்கள் இராஜாங்கத்திற் பெற்றிருந்த உயர் பதவிக்கும் எட்டுணையு மஞ்சாமல், தாம் தீர்க்காலோசனை செய்த பின்னரே அக்கோட்பாடு அங்கீகரிக்கத் தக்கதாயிருப்பின், அங்கீகரிப்பாரென்பதும் அங்கீகரிக்கத்தக்கதல்லாததா யிருப்பின் மறுப்பாரென்பதும் இவர் சரித்திரம் வாசிப்பார் யாவர்க்குந் தெற்றென விளங்கும். தாம் மேற்படி ஸெனேட்டின் அங்கத்தினராயும் அக்கிராசனாதிபத்யத்தை வகித்தவராயு மிருக்கையில், காலிக்ஸினஸ் (Callexenus) என்னும் பிரசித்திபெற்ற பிரபு ஒருவர் ஆர்க்கனுசி (Arginusie) என்னுமிடத்தில் தோல்வியடைந்து உயிர்தப்பியோடிய எட்டுப் போர்வீரர்களுக்கும் மரண தண்டனையை விதிக்கவேண்டுமென்று பிரேரேபித்ததைத் தாம்தடுத்து, அங்ஙனந் தடுக்குங்கால் தம் முன்னிருந்தோர்யாவரும் தமக்கு மாருன கொள்கையை யுடையவராயிருந்தும், தாம் அவர்களுக்குச் சிறிதேனு மஞ்சாது தம்முடைய தீர்மானத்தையே கடைப்பிடித்தாரென்பது வியக்கத்தக்கதே. இவ்விதமே கி. மு. 404-ஆம் ஆண்டில் இராஜ்ஜிய பாரத்தைத்தாங்கியிருந்த முப்பதின்மர் (The Thirty) கூடிய ஒரு சங்கத்தார், தமது நாட்டில் மிகவுங் கீர்த்தியடைந்தவர்களைத் தாம் செய்யத்தகாத அக்கிரமங்களில் உடன்படுத்த வேண்டுமெனக் கருதி, யாதொரு குற்றமுஞ் செய்யாத லீயோன் (Leon) என்னும் பிரபுவின் ஆருயிர் வாங்கும் பொருட்டு, ஸாலமீஸ் (Salamis) என்னுமிடத்திலிருந்து அவரைக் கொணர்வான் ஸாக்ரடீஸ் என்பவரையும் வேறு நால்வரையும் ஏவினர். இவ்வேவலுக்கிசைந்து கடைசியிற் சொன்ன நால்வர் சம்மதித்தாராயினும், ஸாக்ரடீஸ் மாத்திரம் சம்மதித்தாரிலர். அச்சங்கத்தார் இவரை எவ்விதக் கொடுந்தண்டனைக் குட்படுத்துவதாகப் பயமுறுத்தியும், அதற்குச்சிறிதேனும் மனங்கலங்காதும் அவர்களை யொரு பொருட்டாக மதியாதும், தாம் அந்த அக்கிரமத்துக் குடன்படேமென மறுத்தனர். அச்சமயமே இவர்க்கு இறுதியுண்டாகவேண்டியிருப்ப, கி.மு. 399-ஆம் ஆண்டில் கிரீஸ் நாட்டிற்சகல கலகங்களும் நீங்கித்தக்க ஏற்பாடுகள் உண்டான

பின்னரே மாந்தரின் சன்மார்க்கத்திற்குப் பழுதுண்டாக்கினாரென இவர்மீது
குற்றஞ்சாட்டப்பட்டது. அக்குற்றஞ் சாட்டிபவர்கள் மிலிடஸ் என்னுங் கவி
வாணரும், அனைடேஸ் என்னுந் தோல் பதனிடுந் தொழிலாளரும், லிக்கன்
என்னும் பிரசங்கியாருமேயாம். இராஜாங்கத்தாராலும் நாடவராலும் அங்கீ
கரிக்கப்பட்டும் வழிபட்டும் வந்த தேவதைகளை இல்லையென மறுத்து நவீன
தேவதைகளை யுண்டாக்கினரென்பதும், நாட்டினிலுள்ள சிறுர்களை நல்வழியி
னின்றும் பிறழும்படிச் செய்தனரென்பதுமாகிய இருகுற்றங்கள் இவர்
மீதுசாட்டப்பட்டன. இக்குற்றங்களைச் சீர்தூக்கிப்பார்த்து, அவை நிரூபிக்
கப்படுமாயின் அவற்றிற்குத்தக்கபடி அவர்க்குத்தண்டனை விதிக்கவும், அற்
றேல், அவர்மீது கொண்டுவரப்பட்ட குற்றங்களினாய பழியினின்றும் அவ
ரை விடுவிக்கவும், 500·மனிதர்கள் குழுவியசபையொன்று ஏற்படுத்தப்பட்
டது. அவ்வைந்நூறு மனிதர்களும் இக்குற்றங்களை விசாரிக்குந்தறுவா
யில், ஒரே அபிப்பிராயங்கொண்டிலராய், மாறு அபிப்பிராயங்கொண்டவ
ரானார்கள். அவர்களுள் இருநூற்றெண்பதின்பர் இவரைக குற்றவாளியெ
னவும், மற்றவர் இவர் குற்றவாளியல்லரெனவும் தம் அபிப்பிராய பே
தத்தை வெளியிட்டார்கள். அந்நாட்டின் ஆசாரப்படிக்கும் அக்கால முறை
மையின்படிக்கும் குற்றவாளியென்று ஸ்தாபிதஞ் செய்யப்பட்ட ஒருவனு
க்கு சுயேச்சையின்படி நடக்கும் சுதந்திரந் தந்து, குற்றங்கொண்டு வந்தவர்
கள் அக்குற்றத்துக்கேற்க ஒரு தண்டனையைப்பிரேரேபிப்பதும், குற்றவாளி
அவ்விதத் தண்டனையை மறுத்தும் வேறுவிதத் தண்டனையை பிரேரேபிப்ப
தும், நியாயாதிபதிகளாவார் இவ்விரண்டு பிரேரேபனைகளையும் இவற்றின்
நியாயங்களையும் சரிவர யோசித்து, இவ்விரண்டுக்குஞ் சமமாயுள்ள ஒரு தண்
டனையை விதித்தலும் வழக்கமாயிருந்தது. ஸாக்ரடீஸ் என்பவர்மீது குற்
றஞ்சாட்டிய மூவரு ளொருவராகிய மிலிடஸ் என்பவர் பிராணதண்டனையை
இவர்க்கு விதிப்பது உசிதமென்று பிரேரேபிக்கவும், அவ்வழக்கப்படி ஸாக்
ரடீஸ் அதற்கு மாருசப் பிரேரேபிக்கலாமென்று நியாய விசாரணைக்குரி
யோர் கூறினார்கள். அத்தருணத்தில் ஸாக்ரடீஸ் என்பவர் தம்மீது சுமத்
தப்பட்ட குற்றங்களின் உண்மையைக் குறித்து வேறொன்றுங் கூறாது, ஒரு
அற்பதண்டனைக்குள்ளாவதற்குச் சம்மதித்திருப்பதாகத் தெரிவித்திருப்பின்
அதற்கு அந்நியாயாதிபதிகள் உடன்பட்டிருப்பா ரென்பதற்குச் சிறிதே
னும் ஐயமிலது. ஆனால், ஸாக்ரடீஸ் என்பவர் இப்படிச்செய்யாது, அக்
குற்றங்கள் யாவும் ஒப்புக்கொள்ளத்தக்கன வல்லவென்றும், அவர்களுடைய
தீர்ப்பானது நியாயமற்றதென்றும், தாம் நாட்டிற்கு நன்மையே புரிந்தா
ரென்றும், அந்நன்மையி னங்கீகாரமாகத் தம்மை யாதொரு தண்டனைக்கும்
உள்ளாக்காது, பொதுஜன க்ஷேமத்தினிமித்தம் வாணாளைச் செலுத்தியோர்
க்கு அக்காலத்தி லளித்துவந்த பரிசு தமக்களிக்கப்படவேண்டுமென்றுங்
கூறினர். இன்னணம் இவர் கூறியதும் அந்நியாயாதிபதிகளுக்கு ஆச்சரி

யத்தை விளைத்தது மன்றி, இவர் தம் நண்பர்களுக்கும் வருத்தத்தை விளைத்தது. ஆனால் நண்பர்கள் இவரைப் பன்முறையும் வேண்டிக்கொண்டு நிற்ப, அவர்சம்வேண்டுகோளுக்கிணங்கி கடைசியாகமுப்பது மைனு (Minas) அபராதங் கட்டுவதற்குப் பிரியப்பட்டிருந்ததாகக் கூறிமுடித்தனர். இவர் இப்படிப்பேசி முடியும்போது, இவருடைய ஒழுக்கம் முதலியன நியாயாதிபதிகளுக்குப் பொருத்தமின்றி அவர்களுக்குக் கோபத்தை யுண்டாக்கத்தக்கதாயிருந்தபடியால், இவர்களுக் கனுகூலமாக அபிப்பிராயங் கொடுத்தவிருட் பெரும்பாலரும், இவரை வெறுத்துப் பிரதிகூல வாதிகளானவராய்ப் பிராண தண்டனையையே ஊர்ஜிதப்படுத்தினார்கள். இதற்கும் ஸாக்கிரடீஸ் என்பவர் எவ்வளவு மஞ்சாது, தாம் இவ்வுலகத்திற்புரிந்த கருமங்கள் யாவும் தம்முடைய மனச்சாட்சிக்கு விரோதமன்றி, பொருந்தியிருந்தவென்றும், தமக்கு விதிக்கப்படும் தண்டனை யாதாயினும் அதற்கு உடன்படத்தாம் அஞ்சாரென்றுங்கூறினர். அக்காலத்தின் முறைமையைக் கருதுவோமாகில், மரண தண்டனையை விதித்த மறுதினமே அதனை நடத்தி விடுவது வழக்கமாயிருப்ப, ஸாக்கிரடீஸ் விஷயத்திற் சில காரணங்களால் ஒரு மாதமாகும்வரை நடத்தாது நிறுத்திவைக்கப் பட்டிருந்தது. அக்காலம் வரையில் அவர் சிறைவைக்கப் பட்டாராயினும், அச்சிறையினின்றும் அகல்வதற்குரிய சாதனங்க ளெண்ணிறந்தனவாயினும், அவற்றைத்தம் நண்பர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி உபயோகித்து நன்னெறியினின்றும் பிறழ்வது தகாதெனக் கருதிச் சிறையிலேயேயிருந்து அத்தண்டனையை யேற்றுக்கொள்ள வேண்டுமெனக் கருதிய இவர்தம் மனவுறுதி வியக்கற்பாலது. இதுகாறும் பற்பல விஷயங்களைக்குறித்துத் தம் நண்பர்களுடன் உரையாடி வந்ததுபோல், அவர்களுடன் அவ்வண்ணமே மனோதைரியத்தைச் சிறிதும் விடாது அச்சிறையிலிருந்த முப்பது நாளையுஞ் செவ்வனே கழித்துவந்த அப்பெருமானி னெண்ணம் என்னேயோ! மரணமென்பது கனவுமின்றிச் சுகமாய்ச் செயுந் துயிலெனக் கருதினரோ! இன்பமலிந்ததோ ருலகத்தில் வாழும் வாழ்வெனக் கருதினரோ அறியேம்!

இங்ஙனம் இவர் தம் சரித்திரத்தின் சாராம்சத்தை யெடுத்துரைப்பினும், பின் வரும் சிற்சில வினாக்களையும் ஆங்காங்காராய்வான் புகுதல் மிகவும் உசிதமெனக்கருதுவாம். ஸாக்கிரடீஸ் என்பவர் அதிக தனவந்தரா யில்லாமலிருப்பினும், இவர் காலத்திருந்த தத்துவ சாத்திரத்திற் புலமை வாய்ந்தோர் இவரை யன்புடனும் வியப்புடனு மாதரித்து வந்ததற்குக் காரணமாய் இவரிடமிருந்த குணாதிசயங்களென்ன? நீதி வழுவாது தம், வாணாளைக்கழித்தும், ஜனங்களின் நன்மையே சிறப்பெனக்கருதியும், இராஜாங்க காரியங்களைத் துரோகமின்றி நடாத்தியும் வந்த இவரை ஆதன்ஸ் நகரத்திலுள்ளோர் பழித்து இவர்மீது குற்றஞ்சுமத்தி, மரண தண்டனையை விதித்த

தென்னை ? இவர் ஜனங்களுக்கு நன்னெறியை உபதேசிக்கையில் அனுசரித்த கோட்பாடுகள் யா ? இவர் ஜனங்களுக்குத் தெரிவித்த தெய்வீகச்செய்தி யாது ? இவருடைய கோட்பாடுகளுக்கு இவர்க்குப் பின் வந்தோர் எவ்வி தம் பொருள் கண்டனர் ? அவற்றினுற் பின் வழங்கிய தத்துவ சாத்திரத்தி லுண்டாம் மாறுபாடென்னை ? இவ்வினுக்களின் விஷயமாய்ப் பின்னே யாம் தக்கபடி வரைவாம்.

(இன்னும் வரும்.)

சி. ஏன். சரவண முதலியார்.

---

## DISCRIMINATION IN CHARITY.

## பாத்திரமறிந்து பிச்சையிடு.

---

இன்றியமையாச் செயல்களின் மிக்க மேம்பட்டதென்றியாவரா லு மனுசரிக்கப்படவேண்டிய செயல்களில் ஈகையொன்று. ஈயுந் தன்மை யாகிய நற்குணமானது மானிடரனைவருக்கு மியற்கையிலேயே யமைந் திருக்கவேண்டும். உண்மையி லனைவருக்கு மமைந்திருக்கிறது. உலகத்தி லெவராயினுமோரோர் காலத்தில் தம்மைத்தாமே காப்பாற்றிக்கொள்ளு மத்துணை யாற்றலுடையவரல்ல ரென்பது யாவருக்குந் தெரிந்த விஷயம். ஆகவே, எப்படிச் சிலர், ஓரோர் காலத்தில் அல்லது எக்காலத்தும் ஒரு சிலரைச் சார்ந்து அவர் முகம் பார்த்து வாழவேண்டியிருக்கிறதோ, அதேமாதிரியாக அச்சிலர் தம்மைச் சார்ந்து பலரிருப்பாரென்ப தியாவருக்குந் தெரிந்த விஷயம். இவ்வாறு சார்ந்திருப்பார்க்கு "நம்மாலே யாவரிங்கல்கூர்ந்தார் எஞ் ஞான்றுந்-தம்மாலாக்கமிலரென்றுதாமருண்ட"மனத்தரல்லராய் "வறியார்க் கொன்றீதலே யீகை மற்றெல்லாங்-குறியெதிர்ப்பை நீரதுடைத்து" என்ற நாயனுர் வாக்கையுஞ் சிரமேற்கொண்டு தம்மாற் கொடுக்கக்கூடியவற்றை உத்தமபாத்திரமறிந்து அன்போடு கொடுப்பவரே யிவ்வுலகத்துப் பன்னாள் துன்பமனுபவியாது வாழ்ந்து புத்தேளுலகத்தும் புகழுடையாராய்க் கொண் டாடப்படுவர். இன்னும், "பாத்தூண் மரீஇயவனைப் பசியென்னும் தீப்பிணி தீண்டலரிது".

தூய்த்துக் கழியான் துறவோர்க் கொன்றீகலான்
வைத்துக்கழியு மடவோனை—வைத்த
பொருளு மவனை நகுமே யுலகத்
தருளு மவனை நகும்.

என்ற விரண்டு செய்யுளானும், கொடுத்தவராகிய பெரியோர் வ்லியும் புகழும் சிறியோராகிய கொடாதார்க் குறுங்குறையுங் கூறப்பட்டது.

இனிப்பிறர்க்குக் கொடுத்தலெல்லாந் தர்மமென்றுங் கொடாததெல்லாந்தர்மமில்லையென்று மூகித்தல் கூடாது; எனெனில், "எல்லா விடத்துங் கொடைதீது மக்களைக், கல்லா வளர விடறீது" என்ற பெரியோர் வாக்குக்கிணங்கி ஏற்றற்குத்தக்க பாத்திர மிஃதென்றறிந்து கொடுக்கவேண்டும். தவிரவும் நாலடியாரிற் பின்வரும், "உறக்குந்துணையதோ ராலம்வித்தீண்டி யிறப்ப நிழற்பயந்தாங், கறப்பயனுந், தான் சிறி தாயினும் தக்கார் கைப் பட்டக்கால், வான் சிறிதாய்ப் போர்த்து விடும்." என்ற பாட்டில் தர்மஞ்செய்வதற்குக் கருவியாகிய பொருளானது தக்கார் கைப்பட்டால் மட்டுமே பெருநன்மைக் கிடமாகு மென்பது காணப்படுகிறது. "பாத்திர மறிந்து பிச்சையிடு" என்ற வாக்கில் பாத்திரமென்ற பதத்திற்குப் பொருளென்னை? இரப்போர் தம்மோடு கொண்டுவரும் பிச்சையேற்கும் ஓடோ? அல்லது அவர் தாமேயோ? ஒருவரு முன்னையதென்று கூறுர். எனெனில், அவ்வாறு பொருள் கொண்டு ஈகையியற்றுவோர்க்கு "ஈத லிசை பட வாழலஃ தல்லது ஊதிய மில்லை யுயிர்க்கு" என்ற நாயனுர் குறள் பொருந்தாது. ஆனுலிக் காலத்தில் தர்மம் செய்பவரோ உலகில் நீடூழி காலம் புகழ்பெற வேண்டிச் செய்தலா லிப்பேர்ப்பட்ட நல்ல விதிகளைக்கவனித்துச் செய்தாலவர் தம் விருப்பம் முற்றுப் பெறும். நன்னூலார் தந்நூல் முகவுரையில் கல்வி கற்றற்குத்தகாத மாணுக்கர்க ளின்னுரென்று சொல்லியிருத்தல்போல, யான்படித்த நூலேதிலாவது ஏற்றற்குரிய பாத்திர மிதாகும், ஏற்றற்குத் தகாத பாத்திர மிதாகுமென்று வரையறுத்துக் கூறப்படவில்லை. திருவள்ளுவர் மாத்திரம்"

"இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி".

என்ற பாட்டினு லிரப்போனுக்கு வேண்டிய முக்கியமான குணமொன்றைக் கூறியிருக்கிறுர். கோபமென்னுந் தீயை இது நமக்காகாதென்று நன்மக்களனைவரு மொருங்கே நீக்கவேண்டு மென்றுலும் இரப்பவனிடத்தி லிஃதிருக்கவே கூடாதென்று கூறியதென்னையோ வெனின், அவன் யாசிக்கும்போது கொடுப்போர் கோபித்து அவனைக் குரூரமாய் நடத்தின போது மப்படிச்செய்தவர்களுடைய கோபத்தைத் தன் நகையினும், முகப் பணிவாலும் நீக்கி யவர் கொடுப்பது எள்ளளவாயிருந்தாலும் மலையளவாயெண்ணி உள்ளத்துவகை யிருப்பவனுய்த் தன் முகத்தாற் காட்டிச் செல்லானுகில், அவனுக்கு ஒன்றுங் கிடையாதென்பது திண்ணம், இதற்குத் திருஷ்டாந்தஞ் சொல்லித் தெரியவேண்டியதில்லை. பெண்கள் வீட்டிற் வேலையாயிருக்கும்போது, பிச்சைக்காரர்கள், பேரிலாச்சல்போட்டு ஒரு கவளம்

அன்னம் வாங்குமுன்னவர் படும்பாடு தெய்வத்துக்கே தெரியும். சாதுவாய் ஓரிணாச்சலும் போடாது கோபமொன்று மில்லாமல் அவர்கள் தருணம் பார்த்துப் பிச்சை வாங்குகிறவர்கள் தாங்கள் எண்ணியதற்கு மேலாய் வாங்கிச் செல்கிறார்கள்.

எந்நாட்டிலும் பொதுவாய் நந்நாட்டில் பல வருணத்தார்க ளிருக்கின்றார்கள். ஒவ்வொரு வருணத்தாரிலும் யாசகர்களிருக்கின்றார்கள். இவர்களிலெவரும் தஞ் செலவத்தாழவு நோக்கிச் சாதியையும் மதவொழுங்கையும் கைவிடாராகையால் எவ்வெவ் வருணத்தார்க் கெவ்வாறு பிச்சையிட வேண்டுமோ அவ்வாறே யிடவேண்டும். அவ்வாறிடும் பிச்சைதான் சாதியி னேற்றத் தாழ்வு நோக்கி உயர்ந்தோர்க் குயர்ந்தும் தாழ்ந்தோர்க்குத் தாழ்ந்து மிருத்தல் கூடாது.—இதற்குமுன் சத்திரங்கள் கட்டியிருப்பவர்களும் இப்போது கட்டுவோர்களும் கட்ட முயல்வோரும், பிராமணர்களுக்கும், மற்று முயர்ந்த வருணத்தராகிய பிராமணரல்லாதார்க்கென்றும் நினைத்துக் கட்டுகிறார்கள். உலகத்திலிருக்கும் ஆன்மக்களெல்லா மிந்த இரண்டு வருணத்தார்தானா? இஃதென்னவநியாயம்? இப்படித் தன் காரியம் பார்க்கலாமா? இது நன்மக்களுக் கழகா? இவ்வாறு செய்கிறவர்களெல்லாம் "ஈவோன் கருணையும் பொருளு மிரப்போர்க்கினிமை" என்றதை முற்றிலும் மறந்தனர் போலும். எப்படிப் பொக்கிஷக்காரன் ஒருவன் தன் கையிற்கொடுத்த பொருளைப் பாரபக்ஷமின்றித் தன் கீழ்வேலைபார்க்கும் வேலையாட்களி னுண்மையான உழைப்புக்குத் தக்கபடி யவர்களுக்குப் பாகித்துக் கொடுக்கிறானோ, அவ்வாறே நம்மிடத்திற் கடவுளாற் கொடுக்கப்பட்ட பொருளை யவருடைய ஆணைக்கடங்கி எவ்வாறு சன்மார்க்கத்தில் யாவருக்கு முதவும்படி செய்யவேண்டுமோ அப்படிச்செய்வதே மேலோர் செய்கை. இரப்பவர்களுள்ளும் ஏமாற்றஞ்செய்கிறவர்கள் பலரிருக்கின்றர். இக்காலத்திலேயோ "தம்படி யொன்றுக் கைந்து ருத்திராக்கம்" என்றாய்விட்டது. ஆதலால், அதை யுண்மையா யணிந்தோருடைய பெருமையும் மங்கிப்போய்விட்டது.

நம்மைப்படைத்த கடவுள் வெளிமயக்குச் செய்யும் பொய்ச் சந்நியாசி பேரிற் பற்றுள்ளவரா மேலும் தன்பேரைச் சங்கரா வென்றும் இராமாவென்றுஞ் சொன்னதற்காக அவற்கிரங்கி நாமெல்லாமச்சந்நியாசிக்குக் கொடுக்க வேண்டுமென்று நம்மைக்கனவிலுந் தூண்டுவாரா? மாட்டவே மாட்டார். எவனொருவன் தன்னாலியலாத காரியமொன்றிற்குக் கடவுளை நினைக்கிறானோ அவன் விஷயத்திற் கடவுள் கருணைகூர்ந்து மனிதர் மூலமாயேமறைந்து நின்றுதவிபுரிவார். பருத்த புயங்களும், ஒவ்வொரு அங்கமும் சீராயமைந்து சகலவேலையுஞ் செய்யக்கூடிய ஆற்றலுடைய மடியொருவன் எத்துணைச் சிறந்தவருணத்தனாயிருப்பினும் அவனை ஈவோன்

றன் கண்ணூ நோக்கிப் பார்த்தலாகாது. இத்தகையோர்க்கீதலால் இரண்டு பெருங்குற்றங்கட் கிவோர் ஆளாகிறுர்கள். தம்பொருளை வீண் செலவு செய்தலொன்று ஏற்போனை நல்வழிச் செலுத்தாதுபின்னர் பொருளுக்குங் கரையானுயிருக்கச் செய்லதொன்று. ஆங்கிலர்கட்குள் "poor fund" வறியோர் திரவியம் என்று, அதற்காக மிகுதியான பணஞ்சேர்த்து வறியோர்க்கு அதிலிருந்து ஒரு சிறு தம்படியேனும் போகாது ஏதாவது ஒரு தூரமாகிய விடத்தில் அதைக்கொண்டு பெரிய கோவிலொன் றமைக்கப்படுகிறது. இதனல் வறியோர்க்கு வரும் பயனின்னதென்று தெரியவில்லை. இன்னுஞ் சிலர் தம்வினையை யொழிக்க வெண்ணிக் காசிக்குப்போவார், சத்திரம்மைப்பார், சுவாமிக்குத்தான் பொருளுதவி செய்வார்; ஆனல், தம் வாயிலில் வரும் பிச்சைக்காரனுச்கு ஒரு எள்ளளவு மீயார், கோவில் பல த்ம்மூரிலிருக்க "இவ்வாறிரப்போர்க் கீயாதெஞ்சிய" பொருளைக்கொண்டு இன்னும் பல கோவில் கட்டுவார். இம்மதியீனர்கள்,

"அன்பர்த மிருதய மரனுக் காலயம்"
என்பதைச் சற்று மெண்ணிலர் போலும்

தர்மம் என்பதைத் தம்மினின்றும் வேறுனதாய்ப் பிரித்துப்பார்க்கு மறிவீனர்களே "ஏழைபா விரக்கமின்றி இவ்வாறு செய்கிறவர்கள். இனியேற்றற்குத்தக்க பாத்திரமாவாரிலக்கண மாராய்ந்து பார்க்கில் ஏற்கும் பாத்திர விலக்கண மிசைப்பில் உதவுவோன் ஊத்தை யுண்மையி லுணர்ந்து அன்னேன் கோணி லமயமறிந்து தம்முகக் குறிப்பாற் றங்கிலை யுணர்த்தி சிறிது பெறினும் பெரிதெனக் களித்துத் தம்போ லியரைத் தாமெனத் தழூஉம் இத்தகை நற்குண மியற்கையி லமைந்துள அங்கந் தளர்ந்து தங்கையுள தற்றோர் பார்வை யிழந்தோர் கேள்வியு மிலராய் ஆற்றொணுப் பெருநோய்க் கடைக்கல மானோர் நன்னூல் யாவு நலம்பெற வுணர்ந்தும் வறுமையாங் கூற்ருல் வாட்ட முற்றோர் இன்னோர்க் கிடுதலே யீகையென் றிசைப்பர். என்சிற் றறிவுக் கெட்டிய வாறு ஈவோ னிலச்கணம் இசைத்திருக்கின்றனென்.

தன்னுடைய சரீரத்தைக்கொண்டு ஒரு வேலையுஞ் செய்து உயிர்வாழ வொண்ணுதவண்ணமவ்வளவு தாழ்ந்த நிலைமையில் கையிலிருந்தபொருளற்றேனும் அல்லது கையில் சிறிதேனும் பொருளில்லாதவனு யிருப்பவனுக்கிரங்கியீதலுத்தமம்! இரப்போ னியற்கை யாமென் னறிவது எம்மா வியன்றதை யினிது கொடுப்போம் என்றிவ்வாறு உதவுதன் மத்திமம் சத்திரங் கட்டிச் சார்ந்தோரெவர்க்கும் விருந்தென்றுபல் விருந்தே யன்றி வறியோர்க்கீயும் வண்மையிலதா லஃததமம் கண்ணுங் கவலுங் கடைப்பிடி கொண்டு கள்வரி யற்கை கண்ணுற் கண்டும் அவர்தமக் களித்த லேயத மாதமம். இக்காலத்தில் ஏனைய தொழில்களைப் போல இரத்தலும் ஒரு வருவாய்க்

கிடமான தொழிலாய் விட்டது. யாசித்து அதனாற் திரவியம் சம்பாதித்திருக்கிறவரனேகர். உம்முடைய தொழில் என்னவென்றால், யாசித்தல் என்று சொல்லி ஏனையோரைப் போலக் கைப்பொருளும் வைத்துக்கொண்டிருந்தால் அஃது ஈவோர்க்கெல்லாம் ஓர் பேரிழுக்கன்றோ ? மடியர்களுக்கு என்ன வேணு மீதல் கூடாது. யாம் நெற்றியில் வியர்வைநீர் ததும்பச் சம்பாதித்த பொருளைச் சூதர்கள் குடியர்கண் மடியர்கண் முதலானோர்க்குக் கொடுத்தல் நன்றோ? ஐயோ ! இஃது செந்நெல்லைக்கொண்டு தீயில் விதைத்தான் போலல்லவா ஆகும். ஆகலால் யாம் அனைவரும் செய்யாதிருப்போமாக. சில மனிதர்கள், இரவும் பகலும் முறையே வரைவின் மகளிரில்லிலும், கட்கடையிலு மடைக்கலம் புகுந்து கொஞ்சம் அவசர மிருக்குட்போது திருநீற்றையாயினும் திரு மண்ணையேனுந் தரித்துக்கொண்டு தாம் காஞ்சிக்குப்போகும் பிரயாணியென்றும், காசியில் ஓர் மண்டபங்கட்டுவிக்கப் போகிறோரென்றுஞ் சொல்லிச் சிலரை மயக்கித் தம்மாற் கவரக்கூடியதைக் கவர்ந்துகொண்டு செல்கிறார்கள். ஐயோ! இஃதென்ன பாவம்! கள்ளர்களாவது தம்முடைய வுண்மையை யொழியாது நம் பொருளைக் கவர்ந்து செல்கிறார்கள் இப்பொய்ச் சந்நியாசிகளோ நம்மை மதியற்றவராயெண்ணி யேமாற்றி நம் பொருளை யேற்றுக்கொண்டு விழித்திருக்கும்போதே யடித்துக்கொண்டு போதலாலிவர் கள்வரினுங்கள்வர் ஆதலாலிவர்தமைக்கடிதினொழிக.

பி. கே. ஐயாசாமிப்பிள்ளை.

---

## A GARLAND OF PRAISE.

## தோத்திரமாலை.



### கட்டளைக்கலித்துறை.

1. அன்ன மடங்கடி நாய்காவ லென்ன வகத்துளயன்
றன்ன மடங்கடி தாக்குவ னேலிந்தத் தொல்லுலகிற்
பின்ன மடங்கடிந் தீடேறக் கூடற் பிராட்டியுன்றன்
பொன்ன மடங்கடிக் காளாவ தெங்ஙன் புகலெனக்கே.

2. எனக்களிப் பாயென்று நம்பிவந் தேத்துநர்க் கிட்டமெலாம்
மனக்களிப் பாத்தரு மம்மைநின் கூடல் வசிப்பதல்லாற்
சனக்களிப் பாகுலவத் தெங்கா ரழைப்பினுங் காதலிபேன்
வனக்களிப் பாற்பசுப் பாலொக்கு மோபிணி மாற்றினுமே.

3. மாற்றல ரைப்படை காணத் தலையிடு மன்னர்துணிப்
பீற்றல ரைப்படை யங்கொண் டுழல்வதும் பிச்சையர்தோ
ளாற்றல ரைப்படை யாவேர்த ராவது மார்செயற்றென்
கார்றல ரைப்படைக் கும்வரைக் கூடநீ களிமயிலே.

4. மயிலே மதிக்குல மாவிளக் கேயிசை வாய்த்தவிளங்
குயிலே மதிக்கடங் காப்பொரு ளேயருங் கூடலன்பர்க்
கயிலே மதிட்டி வராதெனு நான்மறை யாய்ந்தொழுகப்
பயிலே மதிட்டவின் சித்தம தாயுறும் பான்மையதே.

5. வாகா வரைத்தடக் கொங்கைநல் லாளுமை மாதுதவும
யோகா மலர்க்குழல் வள்ளிதெய் வானை யுகந்திடுசம்
போகா வுலோத் துதிக் கின்றனம் பார்த்தருட் பூரணஞ்செய்
தேகா திருப்பரங் குன்ற குகாவுப தேசிகனே.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

6. நிழலுறு தருக்க ளானு நீர்பெரு நதியி னானுங்
கழனிவாழ் செந்நெ லானுங் கரஞ்சிரங் கூப்பி யேத்தித்
தொழுமடி யார்களானுஞ் சூழ்ந்திடும் பெருமை பூண்ட
பழநியங் கிரியின் வாழும் பரமனைப் பணிகு வாமே.

கட்டளைக் கலித்துறை.

7. வல்வே லனகருங் கண்ணார்க் குழைத்தவர் மாளிகைக்குக்
கல்வேலி கட்டிக் கடுங்காவ லிட்டுப்பின் கைப்பொருள்போய்ப்
பல்வேலை செய்து பதராய்ப் பறப்பினும் பைங்குழையின்
நெல்வேலி நாதனைச் சிந்திப்ப ரேலரு ணேர்ந்திடுமே.

8. வருகைக் கடுங்கணை மாரனைக் கூவீர் வாளிபட்டென்
னுருகைக் கிரங்கலிர் மாங்குயில் காளினி யுற்றுவரங்
தருகைக் கழகனம் மாழ்வார்க் குகந்திடுந் தண்டலை சூழ்
குருகைப் பிரானெனைச் சேரினென் னுழுங்கள் கூக்குரலே.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

9. கன்றெடுத்து விளவுகுத்துங் கஞ்சன்விடு பூதனைபால்
கவர்ந்து மாய்த்துங்
குன்றெடுத்துக் குடைபிடித்துங் கோவலரின் குலம்புரக்குங்
கோமான் றன்னே
டென்றிருப்பே மெனக்கரையு மேழையருக் குவந்தளிப்பா
னிரங்கி மேலாங்

தென்றிருப்பே றையின்வளருந் திருமாலின் சேவடியைச்
சேவிப் போமே.

10. பண்டைமுத லென்றழைத்துப் பரிதவித்த குஞ்சரத்தின்
பகையை மாய்த்திட்
டண்டருக்கு மரும்பதத்தை யதற்களித்த தாமரைக்கை
யபயங் காட்டித்
தொண்டருளம் போற்குளிருஞ் சோலைவளப் பொருனைநதி
சூழுஞ் சீவை
குண்டமெனுந் தலத்திலங்கும் பெருமானைத் தெரிசித்தெங்
குறைதீர்ந் தோமே.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

11. கூடத்தினி விட்ட தாகுமிக் கலியிற்
கோபுர விளக்கென வடியா
ரிடத்திரு ளனுகா தொழித்துவந் தளிப்பா
யிகபரத் தென்னுதற் கிணங்கத்
திடத்திரைக் கரத்தாற் சங்கொடு முத்தஞ்
செம்பவ ளத்தையுஞ் சிதறுங்
கடற்கரை விளங்குஞ் செந்திலி னதிப
காப்பெமக் கருள்வதுன் கடனே.

கட்டளைக் கலித்துறை.

12. நீர்தரு வாயுல கெங்கும் புரப்பினு நீதியுற்றோர்க்
கூர்தரு வாயுணர்ந் தீவா னருட்கொண் டுதிக்குமுன்றன்
கரந்தரு வாய்துவர் கார்மேனி கண்பதங் கஞ்சமன்றோ
வரந்தரு வாய்தொழு தேன்வான மாமலை மாதவனே.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

13. அள்ளியே கொடுக்கு மவரையுந் தடுத்துத்
தாமுமொன் றளித்திடா தரணுங்
கள்ளியே யுலோபக் கண்டகர் தம்மைக்
கவிகொடு புகழ்ந்துநாட் கழித்துத்
துள்ளியே யுழன்ற பேதையே னெனினுந்
துணையென நின்பதந் தொழுதேன்
வள்ளியூர் விளங்குஞ் சதிர்வடி வேலா
மகிழ்ந்திடு வரந்தரு வாயே.

கட்டளைக் கலித்துறை.

14. விராதாதி வீரரை வென்றோன் சகோதரி வேண்டினருட்
டராதா வுனது கடைக்கண் வரந்தரத் தாமதமா
யிராதாள் வரகுண பாண்டியன் றேவி யிசைபெருகு
மிராதா புரத்தன்னை கல்யாணி நின்பத மேத்துவனே.

கோச்சகக் கலிப்பா.

15. பழமறை யோதுதமிழ்ப் பாவல ரெந்நாளுந்
தழைய வரங்களெலாந் தருவா யதுபோல
எழிலியின் மேனியனே யிராதா புரம்வாழு
மழகிய மணவாளா வென்னையு மாண்டருளே.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

16. உலகினிடு மனைவிளக்க முற்றதனி விருந்தினர்க்கு முதவு மாபோற்
பலமுதவும் பதிவிரதை யாகுயை கற்பதெங்கும் பலிக்க வெண்ணி
நலவளனுந் திருவருளின் பெருமையுமே மருவுசுசீந் திரத்தெந் நாளு
மிலகிடுதா ணுவொடயன்மா லெனும்பொருளை யெமதிதையத் திருத்து
[வாமே.

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

17. நன்னியா மகமா யுலகெலா மீன்றுந் தளர்விலாத் தனிப்பராசத்தி
கன்னியா குமரி யாவென நாடிக் கருணைசெய் தாயெனக் கண்டு [தேவி
சென்னியாம் பெற்ற பயன்பெறத் தொழுதேந் தென்கடற் கரைவளர்
உன்னியா தார வரமுவந் தளிப்பா யுத்தம ருளத்துறை யுமையே.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

18. விருப்பதிலாழ்ந் தறந்துடிக்கச் சாநகியைச் சிறையினிட்ட
வெய்யோன் றன்னைப்
பொருப்பதிரைக் கடல்வறளப் பொங்கியெழுஞ் சேனையொடும்
பொருது மாய்த்துக்
கருப்பதியா தடியவரைக் கரையேற்றுங் கண்ணிரண்டுங்
கருணை கூரத்
திருப்பதிசாரத்திலங்குந் திருவாழு மார்பானைச்
சேவிப் பாமே.

கட்டளைக் கலித்துறை.

19. பிறக்கைக்குஞ் சாகைக்கு மச்சமுற் றுலெனப் பேசிவெண்ணெ
யுறக்கைக்கு ணெய்க்கலே பேதைநெஞ் சேயுனக் குண்மைசொல்வேன்
மறக்கைக் கரக்கரை மாய்த்தாள் பவனே வணங்குதியேற்
பறக்கைக்கு ளாமது சூதன மாலருள் பாலிக்குமே.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

20. உருவனந்த சரதன்மக னென்ன வாய்ந்துன்
னுரியவர சிளையவனுக் குதவி யோங்குந்
தருவனந்த மடர்கொடுங்கா னடந்து வானோர்
தலையெடுக்கத் தவஞ்செழிக்கத் தசக்கிரீவக்
சருவனந்தச் சிலைகுனித்து வாகை சூடிச்
சுற்பரசி யொடுமீண்ட கமல நாபா
திருவனந்த புரத்துனைக்கண் காணப் பெற்றேந்
தீங்கொழித்துக் காப்பதுநின் சீர்த்திக்காமே.

எம். எஸ். பிச்சுவையர்.

---

## THE MUNIMOLI OF AUVAI.

## ஔவை முனிமொழி.

திராவிடகோகிலப் பத்திரிகையில் "ஔவையார் முனிமொழி வேதந்த சூத்திரம்" என முகவுரையிட்டு உபப்பிருங்கணப் பிரமாணங்கொண்டு ஈசகேநாதி சைவோபநிஷத் மந்திரங்களை ஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த வேதாந்த சூத்திரம் ஏகான்மவாதப்பொருள் கொடுக்காது சைவ சித்தாந்த சிவாத்துவித தடஸ்தப் பொருள் பயக்கும் வாய்மையை நிரூபணஞ்செய்து முடிவு படுத்தற்குமுன் "நாம் வாதத்தைவிட்டு மற்றொன்று பேசிப் பொழுது போக்கித் தோல்வித் தானத்து நின்றேம்" என்று சுதேச வர்த்தமானி 9-ஆம் இலக்கப் பத்திரிகையிற் கூறி, நாம் நமது கொள்கையைச் சாதிக்கவேண்டின், முன்னர் முனிமொழி செம்பொருள் முதலிய மூன்றனுள் இதுபற்றி வியாச சூத்திரமென்று பொருள் சொல்லப்பட்டதென்று இயன் முறையால் நிறுத்தவேண்டும் என்கின்றார். அங்ஙனம் முன்னர்ப் போதருமாறு நிறுத்திக் காட்டுதும்:—

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லு
மொருவா சகமென் றுணர்.

என்னும் ஔவையார் திருவெண்பாவுக்கு ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் வனைந்த உரையை ஈண்டு வரைகுவாம்:—

தேவர்குறளும் - திருவள்ளுவநாயனாருடைய திருக்குறளும்; திருநான்மறை முடிவும் - சிறப்புப் பொருந்திய நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களும்; மூவர்தமிழும் (திருஞான சம்பந்தமூர்த்திநாய

ஞர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் என்னும் சமயகுரவர்) மூவர்களுடைய (தேவாரமாகிய) தமிழ்வேதமும்; முனிமொழியும் - வியாசமுனிவருடைய வேதாந்த சூத்திரமும்; கோவை திருவாசகமும் - (திருவாதவூராடிகளுடைய) திருக்கோவையார் திருவாசகங்களும்; திருமூலர் சொல்லும்-திருமூலநாயனருடைய திருமந்திரமும்; ஒருவாசகம் என்று உணர் - ஒருபொருளையே குறித்த வாக்கியங்கள் என்று அறிவாயாக எ-று.

முனிமொழியும் என்றதை வியாசருடைய வேதாந்த சூத்திரம் என்று பொருள் படுத்தாது, "முனிமொழியுங் கோவை திருவாசகம்" என நீட்டிக் கூட்டி, மாணிக்கவாசக முனிவர் அருளிய கோவை திருவாசகம் என்று ஓர் ஒவ்வாப் பொருள் கூறி இடர்ப்படுகின்றார். அவ் வொவ்வாமையை ஈண்டுக் காட்டுதும்:—

திருவெண்பாவிற் போந்த குறண்முதலிய பதங்களிலுள்ள உம்மைகள் ஆறும் எண் உம்மைகளாம். முன் மூன்று உம்மைகளும், பின் இரு உம்மைகளும் எண் உம்மையின் பாலனவாக, இடைக்கண் முனிமொழி என்றதில் பெயரெச்ச உம்விகுதி புணர்த்தி ஔவையார் ஓர்சாலும் மயங்கவையார். "சுருங்கச்சொல்லல்" முதலிய பத்தழகினுலும் திருவெண்பா அருளும் வன்மைபூண்ட ஔவையார், அச்சுருங்கச் சொல்லல் என்னும் அழகுக்கு மாருக, முனிமொழியும் எனச் சொற்களை வீணுக அடைமொழியாய்க் கோவை திருவாசகங்களுக்கு முன் நிறுவி விரிக்க ஓர்காலு மிசையார். கோவை திருவாசகம் என்ற மாத்திரையானே அவை மாணிக்கவாசகசுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டன என்பது வெள்ளிடைமலைபோல ஆபாலகோபால நியாயத்தினுல் அறியக்கிடத்தலின் என்க. நாவலரவர்கள் முனி என்னும் மொழி மாணிக்கவாசக சுவாமிகளைக் குறித்ததென்பதை உணர்த்துமாறு "வாதவூரடிகள் முற்றத்துறந்து முழுதுணர்ந்த அந்தணர் சிகாமணியாதலில் முனி என்றெடுத்தோதப்பட்டார்" என்றும், "பேராசியரும் 'திருவாதவூர் மகிழ் செழுமறைமுனிவர்' என்றங்ஙனம் வழங்கியது காண்க" என்றும், "ஆளுடையபிள்ளையார் வாகீசர் முதலியோரும் 'பிரமாபுரத்து மறைஞானஞானமுனிவன்' 'திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறி வாழ வருஞானத் தவமுனிவர்' என்றங்ஙனம் வழங்கப்படுமாறு உணர்க" என்றும், "இது செம்பொருளாம்" என்றும் உரைத்தார். மாணிக்கவாசக சுவாமிகள் முனிவர் எனப்பட்டார் என்றமைக்குச் சிறந்த சாவியங்களின்று அவர் பிரமாணங்காட்டாது, பேராசிரியர் திருக்கோவையார் உரையில் இயற்றிய அகவலில் மிக அரிதாய்க் குறிக்கப்பட்ட பிரமாணம் ஒன்றுமாத்திரம் வரைந்து, ஆளுடையபிள்ளையார் வாகீசராயினேரும் அங்ஙனம் அவசிநாய கூறப்பட்டாரென கப் பிரமாணங்களும் காட்டுகின்றார். இம்

முனி என்னும் மொழி வியாசர் முதலாயினோர்க்கு வழங்கப்பட்ட பின்னர் மாணிக்கவாசகசுவாமி முதலாயினோர்க்கு எய்தநேர்ந்ததா? இன்றேல், மாணிக்கவாசக சுவாமிகளுக்கு இம்முனி என்னும் மொழி வழங்கப்பட்ட பின்னர் வியாசர் முதலாயினோர்க்கு எய்தநேர்ந்ததா ? விடையிறுப்பாராக. முனி என்னும் மொழி வியாசரை உணர்த்துதற்குத் திராவிடபாரத இலக்கியத்தினின்று நாம் விடுக்கும் பிரமாணங்கள் வருமாறு:—

I. "வாடாததவவாய்மை முனிராசன்மாபாரதஞ்சொன்னநாள்" என்று முதற் காப்புச் செய்யுளிலே "முனி" என்னும் மொழி வியாசமுனிவரைச் சுட்டியிருத்தலை முதறகண் எடுத்துப் பார்வையிடுவாராக.

II. சம்பவச்சருக்கத்தில் "கடன் ஞாலமுழுது முய்த்திடு மகவருளெனப் பெருமுனியு மக்துறைநேர்ந்தான்" எனவும்,

III. "பராசரன்றருமுனிவினையொடு கருப்பதித்து மீளவுஞ்சென்று" எனவும்,

IV. அருச்சுனன் றபசிலைச் சருக்கத்தில் "பரிவுடன் முனிவன்மாற்றம் பணிந்துதன்றலை மேற்கொண்டு" எனவும் போந்த செய்யுட்களில் முனி என்னும் மொழி வியாசமுனிவரை உணர்த்தியவாறு காண்க.

V. மகாபாரத வனபருவத்து முப்பத்தேழாம் அத்தியாயத்து

கஸ்யசித்வத காலஸ்ய தர்மராஜோயுதிஷ்டிர: ।

ஸம்ஸ்ம்ருத்யமுநிஸந்தேசமிதம்வசநமப்ரவீத் ॥

கஸ்யசித்வத காலஸ்ய தர்மராஜோயுதிஷ்டிர: ஸம்ஸ்ம்ருத்யமுநிசந்தேசமிதம்வசநமப்ரவீத்॥

"சிலகாலஞ் சென்றபின் யுதிஷ்டிரராகிய தருமராசர் முனிவருடைய ஆஞ்ஞையை நினைந்து இவ்வசனத்தைச் சொல்வாராயினர்" என்னும் முதற்சுலோகத்திலே முனி என்னும் மொழியினாற் குறிக்கப்பட்டவர் வியாசமுனிவரேயாம். இன்னும் வியாசரைச் சுட்டுதற்குப் போதரும் முனிமொழிகள் வேண்டியவாறு வேண்டுமேற் காட்டச் சித்தமாயிருக்கின்றேம். மிக அரிதாய்க் கண்டெடுத்த முனிமொழியால் மாணிக்கவாசக சுவாமிகள் உணர்த்தப்பட்டாராக, நாம் அதினும் சுதித்த பிரமாணங்களால் வியாசரை உணர்த்தப் பிரமாணங் காட்டினேமாதலின் நமது பக்ஷம் செயமடைந்ததென்றறிவாராக. ஆளுடைய பிள்ளையாரும் வாகீசரும் முனிவர் எனப்பட்டார் என்றமைக்குப் பிரமாணங் காட்டியவாறு போல, நாமும் வியாசர், சுகர், பராசரர், துருவாசர், அகஸ்தியர், விசுவாமித்திரர் முதலிய எத்தனையோ முனிவர்கள் முனிவர் எனப்பட்டார் என்பதற்குப் பிரமாணங்கள் அளவிறந்து காட்டவல்லேம். அங்ஙனம் காட்டுவதினால் எய்தும் பயன் யாது மின்றென்று விடுத்தேம். இங்ஙனம் வியாசரை "முனி"

என்னும் பதத்தினுல் செய்யுட்களில் வழங்கிய பிரமாணங்கள் மிகுதி பற்றி யிருப்பனவாக, திராவிடப் பிரகாசிகையில் "முனிமொழி வியாச சூத்திர மென்றங்ஙன முரைத்தாரை, அப்பொருள் செம்பொருள் இலக்கணைப்பொருள் குறிப்புப்பொருள் என்னும் மூன்றனுள் யாதெனக்கடாயினர்க்கு, அது செம்பொருளென்றல் பொருந்காது; என்னை? வழக்கின்கண்ணுதல் செய்யுட்கண்ணுதல் நிகண்டு நூல்களினுதல் முனி வியாசமுனிவரை உணர்த்துதற்கும்மொழி அவர் சூத்திரத்தையுணர்த்துதற்கும் பிரயோக மின்மையான்" என்று அமைத்தம் எழுதித் தமிழுலகத்தை வஞ்சிக்கலாமா!! முனி என்பது வியாசமுனிவரை உணர்த்துதற்குஞ் செய்யுட்கட் பிரயோகமில்லை என்றவர் மேலே காட்டி நாட்டிய பாரதத்து வலிய பிரமாணங்களுக்கு யாது பதிலளிப்பார்? இனி முனிமொழி என்று வியாசமொழி என்ற துணையானே வேதாந்த சூத்திரத்தின் (உத்தரமீமாஞ்சையின்) பாலதாகும். திருமூலர் சொல் என்ற துணையானே அது திருமூலர் திருமந்திரத்தின் மேலாயவாறு போலாம். சூடாமணி நிகண்டின் ஒலிபற்றிய பெயர்த்தொகுதியின் "மாற்றமே மொழியே கிரே" என்னும் இரண்டாஞ் செய்யுளில் "மொழி" "வாக்கு" "சொல்" என்பன ஒருபொருட் கிளவியாமாறு பெறப்படும். ஔவையாரருளிய "தேவர் குறளும்" என்னும் திருவெண்பாவில் உரைக்கப்பட்ட முனிமொழியினுல் உணர்த்தப்பட்டது உத்தர மீமாஞ்சையாகிய வேதாந்த சூத்திரம் என்று யூகித்துணர்ந்த மாதவச் சிவஞானயோகிகளாகிய திராவிட மகாபாஷ்யகாரப் பெரியோர் சகலாகம பண்டிதரால் அருளப்பட்ட சிவஞான சித்தியின் "மறையினுலயனுல்" என்னும் திருச்செய்யுளில் "வாக்கினுல்" என்னும் பதத்தைக் கண்டபோது, வாக்கும் மொழியும் ஒருபொருட் கிளவிகள் என ஓர்ந்து, "வாக்குக்கு" வேதத்தின் ஞானகாண்டப் பொருளை நிச்சயித் துணர்த்தும் உத்தரமீமாஞ்சை (வேதாந்த சூத்திரம்) என்று பொருள் வரைந்து, பின் சிட பரம்பரையானும் உலகுக்குணர்த்தவேண்டி அச்சிவஞானயோகிகள் முனிமொழி வேதாந்த சூத்திரமாதலைத் தமது முதன் மாணுக்கராகிய திருத்தணிகைக் கச்சியப்ப முனிவர்க்கு அறிவுறுத்த, கச்சியப்பமுனிவர் அதனைத் தமது மாணுக்கர் கந்தப்பையருக்கு விளக்க, கந்தப்பையர் தமது சேஷ்ட புத்திரராகிய விசாகப்பெருமாளையர்க்கு அதனை உணர்த்த, அவ்விசாகப்பெருமாளையர். முனிமொழி வியாசரது வேதாந்தசூத்திரம் என்று அச்சிலேற்றி யாண்டும் பரப்பிவிட, இராமாநுஜகவிராயர், ஆறுமுகநாவலர், வித்தியாவிசாரணைத் தலைவர், மற்றைப் பாதிரிமார் முதலியயாவரும் அங்கங்கே சுருக்கியும், விரித்தும், இங்கிலிஷில் மொழிபெயர்த்தும் நல்வழி வெண்பாவை உலகிலே நல்வழியிற் பிரகாசப்படுத்தினுர்கள். வின்பிறெட் * பாதிரியாரும் தமது

* Bev. S. Winfred.

நல்வழி மொழிபெயர்ப்பில் "முனிமொழி" என்றதை * "வியாசரது வேதாந்தசூத்திரம்" என்று 1872ம் வருஷம் மொழிபெயர்த்து அச்சிட்டார்.

திராவிடப் பிரகாசிகைநூலார் "முனிமொழி" யில் கண்ட "மொழி" என்னும் பதம் வேதாந்த சூத்திரத்தை உணர்த்தற்குப் பிரயோகம் காட்டல் வேண்டுமெனக் கடாவ, நாம் "மறையினாலயனால்" என்னும் சிவஞானசித்திச் செய்யுளின் "வாக்கு" என்னும் பதத்துக்குச் சிவஞானசுவாமிகள் உரைத்த உரையினால் பெறப்பட்டதென்று மேலே இறுத்தவாறு விடையளிக்குங்கால், அவர் "மறையினாலயனால்" என்னும் செய்யுட்பொருள்கொண்டு "முதல்வனியல்பு வேதமுதலியவற்றால் அறிதற்கரியதும் என்று பொருள்கொண்டமைபற்றி வேதாந்தசூத்திரத்தினாலும் முதல்வனியல்பு அறியப்படாது என்றாயிற்றே என்று கூறி, அதனால் நமது பக்ஷம் வெற்றிபடைக்காதென் பாரேல், நாம் "அவையெல்லா மருமறையாகமத்தே யடங்கியிடும் அவையிரண்டு மரனடிக்கீழடங்கும்" என்னும் சித்தியார்த் திருச்செய்யுட் பாகத்தைக் காட்டி வேதங்களோடு ஒரு நெறிப்பட மதிக்கப்பட்ட சிவாகமமும் வேதத்தைப்போல திருவடிக்கீழ் அடங்குகின்றமையால், மறையினால் அறியப்படாதவர் என்ற துணையானே ஆகமங்களானும் அவரியல்பு அறியப்படாதவதென்றாயிற்றென்பதும் பெறப்பட, வேதாந்த சூத்திரத்தில் மாத்திரம் தோஷமேற்றி அதனால் அவரியல்பு அறியப்படாதென்று கூறுவதினால் எய்தும் பயன் யாதென்று கடாவி மறுத்துவிடுவாம்.

திருவள்ளுவர் சிறப்புப்பாயிரத்தில் உக்கிரப்பெருவழுதியார் "நான்மறையின் மெய்ப்பொருள்" எனவும், ஆசிரியர் நல்லந்துவனார் அருமறையும் போற்றி யுரைத்தபொருளெல்லாந் தோற்ற" எனவும், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் "மெய்யாய வேதப்பொருள் விளங்கப் பொய்யாதுதந்தான்" எனவும், சேலூர்க்கொடுஞ் செங்கண்ணார் "வேதப் பொருளை விரகால் விரித் துலகோரோதத் தமிழாலுரை செய்தார்" எனவும், களத்தூர்க்கிழார் "அருமறைகளைந்தும் சமய நூலாறும் நம்வள்ளுவனார் புந்தி மொழிந்த பொருள்" எனவும் "தேவர்குறளை"ப் போற்றினமையால், அத்தேவர் குறள் உத்தாவேதமாய் நிலைபெறுமென்பது திராவிடப்பிரகாசிகை யுடையார்க்கும் உடன்பாடேயாக, இப்போது வேதாந்த சூத்திரத்தினால் முதல்வ னியல்பு அறியப்படாதென்று மறுக்குந்துணையானே மறையினாலும் அறியப்படாதது என்று பெறப்பட்டு, அம்மறையின் பொருளாய் உத்தரவேதமாய் ஒருங்கு கணிக்கப்பட்ட தேவர் குறளினாலும் அறியப்படாதென்றாயிற்றே! அங்ஙனமாகவும், தேவர் குறளை மாத்திரம் பொருட்படுத்தி முனிமொழியை மாத்திரம் பொருட்படுத்தாது விடுத்தமைக்குக் காரணம்

* The Vedantic Sutra of Vyasa

என்னை என்றும் கடாவி மறுப்பேம். எவ்விதத்தினுலும் தப்பவொட்டேம் இங்ஙனம் வேதாந்த சூத்திரத்துக்கு அவர் ஆரோபிக்கும் தோஷம் திருநான் மறைமுடிவுக்கும் எய்தும் என்றும் ஓர்வாராக.

"முனி" என்பது வியாசமுனிவரை உணர்த்தவும், "மொழி" என்பது உத்தாமீமாஞ்சையை உணர்த்தவும் பிரயோகம் காட்டி விளக்கினேம். "முனிமொழி" என்றது வியாசசூத்திரம் என்று "ஓர் முறையுமின்றி உரைத்தேம்" என்றவர் இனித் தமது நாவை அசைத்து வரையக் கைநீட்டுவார்தாமோ !! இங்கே இலக்கணைப்பொருள் குறிப்புப்பொருள் யாதும் வேண்டாது, செம் பொருண் மாத்திரையானே முனிமொழி வேதாந்த சூத்திரம் என்று இயன் முறையால் நிறுத்திக்கொண்டேம். அடைமொழி யாதும் பெறுத வாக்கு (மொழி) என்னும் பதத்துக்குச் சிவஞானசுவாமிகள் உத்தரமீமாஞ்சை என்று பொருள்படுத்துவாரேல், முனி என்னும் அடைமொழி கொண்ட மொழி என்னும் பதம் முனிமொழி என நின்று வியாசசூத்திரம் என யாது காரணத்தினுற் பொருள் படுத்தப்படாதோ அறிகிலேம்.

தேவர் குறளும் என்னும் திருவெண்பாவில் குறள், தமிழ், சொல் என்பன தேவர், மூவர், திருமூலர் என்னும் அடைமொழி கொண்டு நின்றாற்போல, கோவை திருவாசகமும் முனிமொழியும் என்னும் அடைமொழி வேண்டிற் றென்பாரேல், நாம் திருநான்மறைமுடிவு ஓர் ஆக்கியோன் அடைமொழி வேண்டாதவாறுபோல, கோவை திருவாசகமும் ஆக்கியோன் அடைமொழி வேண்டாது நின்றதென்பேம். ஆதலின், முனிமொழி என்பது வியாசரது வேதாந்த சூத்திரத்தின் மேலதாக, வேதாந்த சூத்திரமாகிய மொழியும் "முனி" என்னும் அடைமொழிகொண்டு நடந்தது என்பேம்.

வியாச சூத்திரத்தில் ஓர் சிவசப்தமேனும் காணப்படாதிருப்ப, அதனை எவ்வாறு தேவார திருவாசகங்களோடு ஒப்பநிறுத்தலாம் என்பாரேல், திருவள்ளுவநாயனர் அருளிய திருக்குறளினும் ஒரு சிவசப்தம் காணப்படாமை யால், அது எங்ஙனம் தேவார திருவாசகங்களோடு ஒப்ப நிறுத்த வாய்ந்தது எனக்கடாவி மறுப்பேம் ; ஆண்டு ஆதிபகவன் என்பது சிவபிரானையே உணர்த்திற்றென்று பிரமாணம் விடுப்பாரேல், நாம் வியாசரது முதற்சூத்திரத்துப் ப்ரமமும் சிவபிரானையே உணர்த்திற்றெனப் பல உபநிடதோப்பிருங்கணப் பிரமாணம் விடுப்பேம். பாணினி, சைமினி, அகஸ்தியர் முதலிய முனிவர் பலர் நூல் செய்திப்பாராக, அவரையெல்லாம் பொருட்படுத்தாது வியாசரைப் பொருட்படுத்தினது யாதுபற்றி என்பாரேல், பிறமுனிவர் செய்த நூலெல்லாம் தேவார திருவாசகத்துப் பொருள் கொடாதுபோக, வேதாந்த சூத்திரம் ஒன்றே அப்பொருள் தந்து நிற்றலின் வியாசமுனிவரே எடுத்தாளப்பட்டார் என்பேம்.

வியாசர் பசுவர்க்கத்துட்பட்டவர் எனவும், சித்தாந்த நெறியறியாத வர் எனவும், அதனால் அவர் எழுதிய வேதாந்த சூத்திரம் பொருட்படுத்தப் படாதெனவும் ஆக்ஷேபிப்பாரேல், சிவஞான சுவாமிகள் சிவஞானசித்தி யார் "சித்தாந்தத்தே சிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்தி' என்னும் திருச் செய்யுட் பொழிப்புரையில் "சித்தாந்த நெறி வீடு பேற்றிற்கு நேர்வழி யென வாயு சங்கிதை சிவகீதை முதலியவற்றுள் விரித்தோதப்படுதலான்' என்று காணப்படுதலால், வாயுசங்கிதாதிகளுக்குக் கர்த்தாவாகிய வியாசர் சித்தாந்த நெறியறியாதவர் என்னும் கூற்றுப் புறவாழியில் ஒடுங்கிற்றென்க.

சிவசாரூப்பியமுறும் ஞானயோகிகளுடைய பிரமலோகம் (சிவலோகம்) வரையிற்றான் வேதாந்த சூத்திரத்திலே பேசப்பட்டதென்பாரேல், நாம் யோகப்பெயராற் கூறப்பட்ட வேதாந்த உபநிடதத்தினும் பிரமலோகம் வரையிற்றான் பேசப்பட்டதென்று பல பிரமாணங்காட்டி மறுப்பேம்.

இனி உபநிடதங்களைமாத்திரம் எடுத்தாண்டது அமையாதோ? அப்பொ ருள் பயக்கும் வேதாந்த சூத்திரத்தையும் ஔவையார் எடுத்தாண்டது மிகை என்பாரேல், நாம் மூவரருளிய தேவாரங்கள் எடுத்தாளப்பட்டிருப்ப, ஔவையார் அப்பொருள்பயக்கும் கோவை திருவாசகத்தை யாதுபற்றி ஆண்டார் எனக் கடாவி மறுப்பேம்.

ஏத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருண்
மாத்திரைப் படாவெனு மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பலவ சைப்படச்
சூத்திரமானவுஞ் சொற்று வைகினன்.

என்னும் கந்தபுராணத்தின் திருவிருத்தங்கொண்டு வியாச சூத்திரம் சைவ சித்தாந்தப்பாற் பட்டது என்று கொண்டேமாயின், அது "சித்தாந்த சைவ மாசில் காட்சியர் பார்த்துணர்பான்மையால் என்று விதப்புறாது பொது வுரையாய் நிற்றலால் அதுகொண்டு அங்ஙனம் கோடல் பொருந்தாது" என்று திராவிடப் பிரகாசிகை நூலார்கூறுகின்றார். இதனையும் மறுத்துக் கூறுதும்:—

ஈண்டு "மாசில் காட்சியர் என்றது மாத்திரம் சைவ சித்தாந்திகளை உணர்த்தாதென்றும், அதனாற் சைவசித்தாந்த மாசில் காட்சியர் என்று வித ப்புறல் வேண்டும் என்றும் கருதுகின்றார். "உருவிபமலமே மாசு" என் னும் நிகண்டுப் பிரமாணத்தானும், "கசடு மலினமுங் கறையு மழுக்கும் மல முங் களங்கமும் மாசாகும்மே". என்னும் பிங்கல நிகண்டினாலும் "மாசு" 'மலம்' என்பன ஒரு பொருட் கிளவி என்றுணர்க. உணரவே, மாசில் காட்சியர் என்றது மலம் நீங்கிய தெளிவுக்காட்சியை யுடையார் மேற்று. ஞானயோ கத்தை உணர்த்தும் சிவஞான போதத்துப் பத்தாஞ் சூத்திரத்தினால் தெளி வுக்காட்சி யுடையோர்க்கே மலம் நீங்குமெனபது பெறப்படும். கண்ணொளி

யோடு கூடிய வழியும் இது ஞாயிற்றின ஒளி என அட்பெற்றியதாய்க் காண ப்படும் ஞாயிற்றின் காட்சி தெளிவுக் காட்சியாமாறு போல, உயிர் முதல்வ ேனாடுடனாய் நின்றறியினும் தானென வேறு காணப்படுமாறின்றி அவனே டொற்றுமைப்பட்டு நிற்பது தெளிவுக் காட்சியாகிய மெய்யுணர்வேயாம். அம்மெய்யுணர்வினை யுடையார்க்கு ஆணவமலத்தின் குணங்களாகிய காமம் வெகுளி முதலியன இல்லையாம் என்றோர்ந்தே திருவள்ளுவ நாயனார்,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்."

என்றருளினர். "இருணீங்கி யின்பம் பயக்கும்" என்னும் திருவெண்பாக் கண்ணதாகிய "மாசறு காட்சியவர்" என்பதற்குப் பொருள் "மெய்யுணர் வினையுடையார்" என்றார் பரிமேலழகியார். "நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதி, லலைப்பட்ட வார்வமுதற் குற்றம்போ லாயினர்" என, மேலைத் திருக்குறட் பொருளை அடக்கி யுரைத்தார் ஸ்ரீசேக்கிழார் நாயனா ரும் என்க. சைவசித்தாந்திகள் சிவபோகச் செல்வ முடையராம் என்பது "ஏகமாய் நின்றே யிணையடிகளொன்றுணரப் போகமாய்த் தான் விளைந்த பொற்பினன்" என்று சிவஞான போதம் கூறுதலான், இந்தச் சிவபோக நிலைக்க ணின்றவர் சைவசித்தாந்த பரமாசாரிய சுவாமிகளாகிய சுந்தரமூர் த்தி நாயனார் என்பது "முடிவிலாத சிவபோகம் முதிர்ந்து முறுகி விளைந்த தால்" என்னும் பெரிய புராணச் செய்யுளால் அறியப்படும். படவே, இச் சைவசித்தாந்தச் செல்வர் "மெய்யுணர்ந்தார், நன்னுதலா யென்னுடைய நாதனருளாற் குளத்திற், பொன்னடைய வெடுத்துனக்குத் தருவது பொய் யாதென்று" என்னும் திருச்செய்யுளால் மெய்யுணர்ந்தார் எனப்பட்டார். ஆதலின், "மாசறு காட்சியர்" மெய்யுணர்வினையுடைய சைவசித்தாந்தி களே யாமாதலின், "மாசில் காட்சியர்க்கும்" பின்னரும் "சித்தாந்தசை வம்" என ஓர் விசேஷணம் வேண்டிற்றெனச் சபாபதி நாவலரவர்கள் அவா வினமை மிகையாம் என்க.

உமாபதி சிவாசாரிய சுவாமிகளாற் பௌஷ்கராகம விருத்தியில் "ஸ்ரீக ண்டாசாரியர் பாஷ்யம்" என்று மாத்திரம் கூறப்பட்டதேயன்றிச் "சிவாத் துவித பாஷ்யம்" என்று கூறப்படவில்லை.

இதுகாறுங் கூறியவாற்றான் "முனிமொழி" என்பது செம்பொருளி னால் வியாச சூத்திரத்தின் மேற்றென்று பிரமாணங்காட்டி இயன்முறை யான் நிறுத்தினதோடமையாது, "வேதாந்த சித்தாந்த அத்துவித விவேக சபையார்ப்" பெயர்ச் செடியுண் மறைந்து புகுந்து திராவிடப் பிரகாசிகை நூலார் நம்மைக்கடாவிய வினாக்களுக்கெல்லாம் தக்கவிடை இறுத்து விட் டோம் என யாவரும் உணர்ந்து கொள்வார்களாக.

ஸ்ரீ காசிவாசி-செந்திநாதையர்.

# ÆSOP'S FABLES.

## கட்டுக்கதைகள்.

### II. கழுதையும் வாலில்லாக் குரங்கும் அகழெலியும்.

ஒரு கழுதையும் வாலில்லாக் குரங்கும் தங்கள் மனக்குறைகளை யொத்துப் பார்த்தன. கழுதை தனக்குக் கொம்புகள் வேண்டுமென்று முறையிட்டது. வாலில்லாக் குரங்கு, தனக்கு வாலில்லாததனுற் சங்கடப்பட்டது. இப்பேச்சைக் கேட்டிருந்த வோர் அகழெலி "நில்லுங்கள், நுமது குறைகளை விட்டொழித்து, நீங்கள் வகித்திருப்பதற்காக நன்றியுள்ளவரா யிருங்கள். எளிய முற்றுங் குருடாகிய வகழெலியோ உங்களனைவரினும் மிக்க கேடான நிலைமையில் இருக்கின்றது" என்று சொல்லிற்று.

நீதி:—நம்மைக்காட்டிலும் மற்றையோர்கள் மிகக் கேடான நிலைமையி லிருக்கும்வரை நாம் முறையிடக் கூடாது.

அமைக்குமாறு:—திருப்தியென்னும் நற்குணத்தையடைய வெகு நல்ல வழி, நம்மைக்காட்டிலும் மிகக்கேடான நிலயிற் பலரிருக்கின்றன ரென்பதை நினைத்துக்கொள்வதேயாம். ஏனென்றால், சாதாரணமாய் நாம் நம் அயலாரிடத்துள்ளதோர் சிறந்த நற்பொருள் நம்மிடத்தில்லை யெனினும், அவனிடத்தில்லாத வேறு சில நம்மிடத்திலுள்ளனவாம் என்னும் இம் மனவமைதி காணுதவர்கள் சிலரே. "தான் ஒரு நிலமிழந்தத னிமித்தம் தன்னோடு அனுதாபப்பட்ட ஒருவனுக்கு அரிஸ்டப்பஸ் என்போர் அளித்தவிடை எனக்கு மிக மகிழ்ச்சியைத் தருகின்றது. ஏன்? எனக்கு இன்னும் மூன்று நிலங்களிருக்கின்றன. உனக்கோ ஒன்றைத்தவிர வேறொன்றுமில்லை. அதனால், நீ எனக்காக வருத்தப்படுவதைக் காட்டிலும் நான் உனக்காக வருத்தப்படவேண்டும் என்றார்" என்று அட்டிஸன் என்பவர் கூறினார். நம்மைக் காட்டிலும் மிக்க வதிர்ஷ்டமுள்ளவர்களைப் பார்ப்பதே தொழிலாகக் கொண்டால், தீக்குணம் யாவற்றினும் மிகவும் இழிந்ததும் இன்பத்துக்குப் பெருங் கேடு விளைப்பதுமாகிய பொறாமைக்கு ஆளாய்விடுவோம். "திருப்தியே யியல்புடைச் செல்வம்" என்றார் சாக்ரடீஸும். ஈசுவர விதி நமக்குக் கொடுத்திருப்பதற்காக நாம் நன்றியுள்ளவராயிருந்து, அது கொடாமல் வைத்திருக்கிற செல்வங்களுக்காக ஆசைப்படுவதை விட்டொழிவோம்.

திருப்தியென்னும் நற்குணத்தை வளர்ப்பது இன்ப விதை விதைத்தலாம்.

"நம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
யம்மா பெரிதென் றகமகிழ்க."

நீதிநெறிவிளக்கம்

## III. சிங்கமும் நான்கு எருதுகளும்.

நான்கு எருதுகள் ஒரே வெளியில் ஒன்றுக்கொன்று எப்பொழுதுங் கிட்டவேயிருந்து சேர்ந்து மேய்ந்தன. ஒரு சிங்கம் அடிக்கடி அவற்றைப் பார்த்து அவைகளைத் தனக்கு இரையாகக் கொள்ள மிகவும் விரும்பிற்று. ஆனால் அவைகளில் யாதேனும் ஒன்றன்மீது சுலபமாய்ப் பாயக்கூடிய போதிலும் அவைகள் சேர்ந்திருக்கும்வரை தன்னை ஜெயித்துவிடுமென்று தெரிந்த சிங்கம் அவைகளில் யாதேனுமொன்றன்மீதும் பாயத் துணியவில்லை. ஆகையாற் பத்திரமாய்க் கொஞ்சத் தூரத்திலிருந்து பார்ப்பதோடு திருப்தியடைந்திருந்தது. அவ்வாறாகவும் அவைகளைப் பிரிப்பதற்கு ஒருபாயங் கருதி அன்பில்லாச் செவிச்சொற்களாலும் தீய குறிப்புக்களாலும், ஒன்றைப்பற்றி மற்றொன்று சொன்னதுபோலச் சொல்லிக் குரோதத்தையும் அவைகளிற் பிரிவையுந் தூண்டும்படி முயலுவேன் என்று மனவுறுதி கொண்டது. அவ்வாறே சிங்கங்கொண்ட எண்ணங் கைகூடிற்று. எருதுகள் தமக்குள் மனஸ்தாபப்பட்டு முன்போல் ஒருமித்து வாழாமல் தனித்தனி பிரிந்தன. இவ்வாறு ஒவ்வோர் எருதும் தனித்து மேய்வது கண்ட வச்சிங்கம் அவற்றின்மீது தனித்தனி பாய்ந்து கொன்று அவற்றை ஒன்றன்பின் ஒன்றாகத் தின்றது.

நீதி:—ஒற்றுமை பலமாம்.

அமைக்குமாறு:—ஓர் இராச்சியமாவது வீடாவது தனக்குள்ளே பிரிந்தால் நிலைத்து நில்லாது. மனித சபைகளிலெல்லாம் அவை பெரும் பகுப்புக்களாகப் பகுக்கப்பட்டபோதிலும், அல்லது தனித்தனி குடும்பங்களாக வகுக்கப்பட்டபோதிலும், ஒன்றுமையே பலத்திற்கு மூலமந்திரமாம். மனிதருளத்திற் போர் நடுக்கத்தை விளைக்குமாயினும் அது நன்மையோடு கலவாத தனித்தீமை யன்று. ஏனெனில், அதனால் ஜனசமூகத்தின் வாழ்நாள் உற்சாக முறுவதனோடு ஒற்றுமையின் இன்றியமையாமையும் வலியுறுகின்றது. சிறந்ததோர்அரசியற்புலவன் ஜனசமூகத்தின் பகையும் போர்புரியுந் தன்மையும் அல்லாமல் ஏதேனும் ஓர் எண்ணமேனும் ஒரு வடிவமேனும் நாகரிகமுள்ள மனிதர் குழாம் மிகவுமரிதாய்க் கண்டு பிடித்திருக்கு மென்றும், ஒற்றுமை யூக்கம் பிறர் பகைச் செயல்களால் உதவி செய்யப்பட்டாலன்றி எக்கூட்டத்தார்க்கும் தமக்குள்ளே ஒற்றுமையுணர்ச்சி விளைப்பதற்கு நாம் வீணில் எதிர்பார்ப்போமென்றுங் கூறினன். சனவேற்றுமையைப் பெரிதும் வளர்ப்பது போரேயாம். ஒரு குடி ஜனத்தின் ஒன்றின முயற்சியைத் தங்கள் பொதுக்காவல் நிமித்தம் பலப்படுத்தும் அக்கவலைக் கடலின் தனிமக்கள்சுயநயம் ஆழ்ந்து போகின்றது. நமக்கு இயற்கையிலமைந்த அன்போடு கூடிய அனுதாபங்களினல் மட்டும் விளைந்துழி வலியற்றுப் போதியதன்றாய் நிற்கும் ஒரு குலத்தின் பொதுஜன நாட்டம்,

புறப் பகைஞர்களை எதிர்க்கவேண்டியிருப்புழி, பேருக்க முறுமாறு தூண்டப் படுகின்றது. தனி வாழ்க்கையில் நேசர்கள் பழக்கம் சுற்றத்தாருக்குப் பேரினிமை பயக்கும். நாம்நம் நேசத்தைப் பாதுகாக்க வேண்டுமென்றால், பொய்ப் பேச்சினாற் பிளவுபடாதவாறும் குண்டுணி மாக்களுடைய வீண் செய்திகளாற் கெட்டுப் போகாதவாறும் நாம் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்.

"கூடிவாழ் வோரே குறையா வழியினர்மற்
றோடிவில கிட்டா ருறுவ துறுகணென்றே
நாடி யறியா நமரங்க டேரவன்றோ
பீடுடைய தாமரைகாள் பெட்பி னருங்குறைவீர்?"

தாமரைத்தடம்
ம. சு. கோவிந்தசிவன்.

---

## REVIEWS OF BOOKS.
## புத்தகக் குறிப்புக்கள்.

---

அரிசமயதீபம்:

[இஃது இயற்றமிழாசிரியரான ஸ்ரீமான், கா-இராமசாமி நாயுடவர்களாற் பரிசோதிக்கப்பட்டு, ஸ்ரீமான்-திருமணம்-செல்வக்கேசவராய முதலியார் அவர்கள், எம். ஏ. செய்துவரும் ஆதரவும் பேருதவியுங்கொண்டு அச்சிடப்பட்டு வருகின்றது. இது சே. முத்துகிருஷ்ணநாயுடு அவர்களாற் சஞ்சிகை ரூபமாக வெளியாகின்றது. விலை சஞ்சிகையின் அளவுக்குத் தக்கப்படி யேற்படுத்தப்பட்டுளது.]

இவ்வரியநூலை யருளிச்செய்த பாவலர் கீழை-சடகோபதாசர் என்பார். இதன்கண்ணே கூறப்படும் விஷயம் ஸ்ரீமத் வைஷ்ணவாசியர்களது பரம்பரையேயாதலின் இதனைச் 'செய்யுட் குருபரம்பரை' அல்லது 'குரு பரம்பரைச் செய்யுள்' என்னலாம். விசேஷமான திரிசொற்கள் பயிலாது அருகிய இலக்கணபிரயோகங்கள் மேவாது, செந்தமிழியற் சொற்களால் யாக்கப்பட்டு இனியநடையும் ஒழுகிய லோசையுமுடையதாய்க் கற்றோரும் மற்றோரும் ஒருங்கே பாராட்டற் பாலதாய் அமைந்துளது இந்நூல் இதன் அருமை பெருமையறிந்தே நமது கனம்பொருந்திய சர்வகலாசங்கத்தார் இதனை 1904-ஆம் வருஷத்துப் பி. ஏ. பரீக்ஷைப்பாடங்களு ளொன்றென ஏற்படுத்துவாராயினர். இந்நூலின் முதலிரண்டு சருக்கங்களாகிய பரமபதச் சருக்கமும் ஆதியோகிச் சருக்கமுமே பாடப்பகுதியாம். இனி, ஆழ்வார்கள் ஆசாரியர்கள் வைபவமான இந்நூலுக்குச் சமதமாத்யாத்ம குணசம்பன்னர்களாகிய ஸ்ரீமான் கூ. முதலியாண்டான் ஸ்வாமிகள், இயற்றமிழ்ப் பிரபன்ன வித்துவான் ஸ்ரீமான்-கொ. பள்ளிகொண்டான் பிள்ளையவர்கள் என்னும் ஆசிரியர்கள் நியமனத்தின்வண்ணம் இந்நூலுக்குப் பொழி

ப்புரை யொன்றுசெய்து சேர்க்கப்படுவதாயிற்று. அது தானும் வேண்டிய வளவு விரிந்தும், அவசியமான விடங்களில் விசேடவிலக்கணங்கள் கூறியும், சாம்பிரதாயமான விடங்களிற் சாம்பிரதாயத்திற் கேற்றபடி பொருள் சொல்லியுஞ் சொல்லாநின்றது. இந்நூலின் முதல் நான்கு சஞ்சிகைகள் கண்ணுற்றேம். இன்னும் மற்றைச் சஞ்சிகைகளும் விரைவில் வெளிவருமென நம்புகின்றேம். தமிழ்மக்களாவார் இத்தகைய நூல்களின்கண் ஆர்வம்பாராட்டி மேற்கொண்டு போற்றுவாராக. மேலும் இவ்வரிசயதீபம் சஞ்சிகைரூபமாய் வெளிப்பட்டுக் குறைந்தவிலைக்கு அகப்படுவதனால் யாவரும் வாங்கி வாசிக்கத்தக்க நிலைமையிலிருக்கின்றது. இது பெற்றுப் படியார் மற்போனால் அது தமிழ்மக்கள்பாற் குறையேயாமன்றி வேறில்லை.

ஸ்ரீ கிருஷ்ணசைதன்ய சுவாமிகள் சரித்திரம் :

[இது ம-ா-ா-ஸ்ரீ, பட்டு - விஜயரத்னப்பிள்ளையவர்கள், எவ். டி. எஸ். சென்னை வைஜயந்தி அச்சியந்திர சாலையிற் பதிப்பித்தது. இதன் விலை ரூ 2. தபாற்கூலிவேறு.]

அனைவருக்கும் மோட்சசாம்பிராச்சியந்தர வல்லதாகப் பல்லோராலும் மதிக்கப்படுமிவ்வரிய நூல் ம-ா-ா-ஸ்ரீ, திரு-பக்தவத்ஸலம், பி, ஏ., ம-ா-ா-ஸ்ரீ, வே - வேங்கட ஸ்ரீநிவாஸன் என்ற இருவர்களா லியற்றப்பட்டது. அமிர்தபஜார்பத்திரிகையினாசிரியராகிய சிஷிர் குமார்கோஸ் அவர்கள் - எம். ஏ., 'கௌரங்கபிரபு' என்றபேரோரிய நூலாங்கில மொழியிலியற்றி வெளியிட்டனர். அந்நூலின் சாராம்சமனைத்து மித்தமிழ்நூலின் கண்ணே யினிமைபெற மொழிபெயர்ப்புவகையாற் கொண்டுவரப்பட்டிருக்கும் பான்மை யாவரானும் பாராட்டற்பாலதே. இந்நூலைத்திறந்தவுடனே திறந்தானுக்குத் தரிசனங்கொடுப்பவர் ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மூர்த்தியே அஃதாவது அவரது திருவுருவப்படமொன்று நூலின் முகத்தேவைக்கப்பட்டுளதென்பதாம். இந்நூல் பிரமஞான சபையின் அவயவியாகிய அனிபெஸண்டு அம்மையவர்களுக்கும் அபயாநந்தஸ்வாமி யவர்களுக்கும் உலகின்கண் அவ்வக்காலங்களிலே வெவ்வேறு மதங்களிற்றோன்றிய பத்தராயினார் பல்லோர்க்கு முரிமையாக்கப்பட்டுளது. "எல்லாத் தருமங்களையும் விட்டு என்னை யொருவனையே சரண மடைவாயாக; நானுன்னைச் சமஸ்த பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன் ; துக்கிக்கவேண்டாம்" என்றகட்டுரையை மேற்கொண்டது. இதற்கு ம-ா-ா-ஸ்ரீ, என். பாலசுப்பிரமணியமுதலியாரவர்கள். எம். ஏ., ஆங்கிலத்தில் ஒரு முகவுரை யெழுதியிருக்கின்றனர். இது தவிர இதற்கு நூலாசிரியர்களெழுதிய முகவுரையுமொன்றுண்டு. அதன் கண்ணே யவர்களெழுதியிருக்கு மிரண்டொரு விஷயங்கள் தமிழபிமானிகள் யாவராலுங்கவனிக்கத்தக்கன. அவை பின்னையெடுத்துக் காட்டப்படும். "தமிழின் தற்கால நடையொழுங்கைப்பற்றி நூலாசிரியர்கள் கொண்டவபிப்பிராயம் யாதெனில், ஒருபாஷையிருள்ளதாய்க் குன்றிக்குறைந்து ஒன்றுமிலதாகா தோங்கிவளரவேண்டியதாயின் அதனிடம் கட்டாயம் அநேகமாறுதல்கள் காணப்படும் என்பதே. உலகவழக்கத்திலொருவகைச்சொல் லுருவம் ஊன்றிவிட்டதாயின் ஆரம்பத்தைநோக்கி அது குற்றமுள்ளதாய்த் தோன்றினும் பின்னுள் மரபையனுசரித்து அதைகுற்றமுள்ளதாகவே யெடுத்துக்கொள்ளல் வேண்டும். 500 - வருஷங்களுக்கு முன் எழுதியதொன்னூல்களில் அவ்விதமாறுதல்களுக்கு ஆதாரம் இல்

லையேயென்று கூறுவது, அவதாரம் என்றவடசொல் ஆங்கிலபாஷையிலும்
சேர்க்கப்பட்டு அகராதியினிடங்காணப்படுவது 50. - வருஷத்துக்கு முன்
னும் அப்பாஷையினிடந் தோன்றுததினால் அதை அறவே யொழித்துவிட
வேண்டுமென்று அநுதாபப்படல் போலும். × × × அப்படியே தமிழி
லும் நன்னூலெழுதிய காலத்திலிருந்து இதற்குள்ளாக எத்தனையோ மாறு
தல்கள் விளைந்திருக்கின்றன. பாமரர்பேச்சு வழக்கத்தை அறவேதள்ளி
னும் பண்டிதர்கள் சொற்போக்கிலாகினும் அதிகமாயனுஷ்டித்துச் சொல்
வதே இன்றியமையாததாகிறது. இவ்வாறிலாது வெகுபழைய இலக்க
ணமே நமக்கு ஊன்றுகோலாவதென்றெண்ணி நடக்கமுபன்றால் நம்பாஷை
பேசப்படுவதற்கும் எழுதப்படுவதற்கும் விரும்பப்படாத அநேகவித்தியா
சங்கள் உண்டாகிப்பல்லோருக்கும் பயன்படாததாக இறந்தபாஷைகளில்
ஒன்றாய் மறைந்துவிடும். இவ்வாறு நவீனவழியை நாடிச்செல்வதிலும்
ஒருவர்க்கொருவர் அபிப்பிராயத்தில் மாறுபடுவாராயினும் 'எம்மாறுதல்கள்
கொள்ளத்தகுவன எம்மாறுதல்கள் கொள்ளத்தகாதன என்பதை முடி
வாய்க்காலமாகிற கடவுள் காட்டவேண்டுமே யன்றி மனிதரால் தேறித்
தெளியமுடியாது. × × × + ஒருவாக்கியத்திலெழுவாய் தோன்றாது
மறைந்து நிற்றல் கதைப்போக்கின் தன்மையாலும் சம்பாஷணையியல்பாலும்
தமிழ்ப்பாஷையிலக்கியத்திற்கு ஒத்ததென்று அவ்வாறே அநுஷ்டிக்கப்பட்
டிருக்கிறது. வேறு சில மாறுதல்களு மிந்நூலினிட மாங்காங்கே காணப்
படும். அன்றியும் பாஷைநயத்திற்குரியவடசொற்களை ஆங்காங்கேபிரயோ
கிப்பது கிரமமென்றும் தற்கால இலக்கியத்திற்கு ஒத்ததென்றும் அவ்வாறி
லாது வடமொழி போக்கிக்கடுந்தமிழ்மொழிகோடல் உசிதமன்றென்றும்
இந்நூலிடங் கொள்ளப்பட்டு இருக்கிறது. விரிக்கிற்பெருகும்." தெய்வத்
தன்மைவாய்ந்த இந்தமேன்மையான சரித்திரத்தின்கண் சோகரசமும்
பத்திரசமும் மிகுந்து ஒழுகுகின்றன. 'பக்திவிநோதர்' என்னப்படும் கனம்
பொருந்திய ஸ்ரீகேதாரநாததத் அவர்கள் பதிப்பித்த ஒருசிறியநூலும் இத்
தமிழ் நூலுக்கு உதவியாயிருந்தது. வடமொழியில் ஸ்ரீ சைதன்ய சுவாமி
சரித்திரத்தைப்பற்றி பலநூல்களிருப்பினும் அவற்றுளொன்றேனுமித்தமிழ்
நூலுக்கு ஆதாரமாகக்கொள்ளப்பட்டிலது. மேற்கூறியாங்கு ஆங்கிலநூல்
களிரண்டு இந்நூலாசிரியர்களுக்கு ஓராற்றானுதவிபுரிந்தனவெனினும் இவர்
கள் தமது சுயகற்பனா சக்தியாலாய விஷயங்கள் பலவற்றை தந்நூலின்கண்
காட்டியிருத்தலால் இத்தமிழ்நூலை அவ்வாங்கில நூல்களின் மொழிபெயர்ப்
பன்று என்று கூறுவதே ஏற்புடைத்தாகும். இச்சரித்திரத்துக்கு அங்க
மாக ஸ்ரீ பக்தவத்ஸலம்-பி.ஏ., இயற்றிய பாயிரம் மேற்புல விஞ்ஞானிகளது
சாஸ்திர முறையை யொட்டிச்செய்யப்பட்டதோர் அரியபகுதியாம். அதனை
யாம் பல்முறை படித்து ஆனந்தித்தமை எடுத்துரைக்கற்பாற்றே. அநேக
அருமையான ஆங்கிலக்கருத்துக்கள் வெகு சுலபமாகத் தமிழின் கண்ணே
கூறப்பட்டுள. இந்நூல் அமைந்திருக்கும் தன்மையாவரும் கொண்டாடத்
தக்கது. இந்நூலின் நடை எவ்விடத்திலாயினும் தடைப்படுவதின்றி ஆற்
றின் பிரவாகம்போற் செல்லுகின்றது. இந்நூல் நல்ல பளபளப்புள்ள கா
கிதத்திற் பெரிய எழுத்துக்களிற் கண்கவர்வனப்பினதாகப் பதிப்பிக்கப்பட்
டுளது. இஃது ஏறக்குறைய - 370 - பக்கங்கள் கொண்டது. இதனைத்
தமிழ்ப் பாஷாபிமானிகளும் பக்தகோடிகளும் வாங்கிப்படித்து உண்மையு
ணர்ந்து உய்வார்களென்று நம்புகின்றோம்.

# EDITORIAL NOTES.

# பத்திராதிபர் குறிப்புக்கள்.

திண்டுக்கல் இருப்புப்பாதை:--திண்டுக்கல்லிலிருந்து கோயமுத்தூருக்குப்போகவேண்டுமானால் திருச்சிராப்பள்ளி ஈரோடுமுதலிய ஊர்கள்வழியாகச்செல்லவேண்டும். இது மிகவும் சுற்றுவழி. நம் இந்திய கவர்ன்மென்டார் தென்னிந்திய இருப்புப்பாதை அதிகாரிகளுக்குத் திண்டுக்கல்லிலிருந்து பழனி, திருப்பூர், சத்தியமங்கலம், மேட்டுப்பாளையம் முதலிய ஊர்களின் வழியாய் இருப்புப்பாதை யேற்படுத்தக் கூடுமோவென்று பார்க்கக் கட்டளையிட்டிருக்கின்றார்கள். இருப்புப்பாதை சீக்கிரம் ஏற்பட்டுவிட்டால் மிகவும் நலம். திண்டுக்கல்லிலிருந்து பழனிக்குப்போவதற்குக் கட்டைவண்டியிலேறி மூன்றுநாட்கள் அவஸ்தைப்பட வேண்டும். இது சீக்கிரம் கைகூடுமென்று நம்புகின்றோம்.

சென்னையிற் பாதிரிமார் கூட்டம்:—இவ்விந்தியாவில் வெவ்வேறிடங்களிலிருந்த பாதிரிமார்கள் சென்னையில்வந்து கூட்டங்கூடுகிறார்கள். இக்கூட்டத்தின்கண் கனம்பொருந்திய டாக்டர் மில்லர்துரையவர்கள் அக்கிராசநாதிபதியாக வீற்றிருக்கும்படி யேற்பாடுசெய்யப்பட் டிருந்தது. டாக்டர் மில்லர்துரை யவர்களின் தேகஸ்திதி அசௌகரியப்பட்டிருந்தனால் இவ்வேற்பாடு தடைப்பட்டது. டாக்டர் மில்லர்துரையவர்கள் இன்னும் வெளியிற் புறப்படும்படியான ஸ்திதியிலில்லை. அவர் விரைவிற் சுகப்படுக.

செந்தமிழ் :—இப்பெயர் கொண்டதோர் மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரால் சுபகிருது வருஷம் கார்த்திகை மாசம் தொடங்கி வெளியிடப்படுகின்றது. பத்திராசிரியராவார் சேதுஸமஸ்தானவித்துவானாகிய ரா. இராகவையங்காரவர்கள். இச்செந்தமிழ்ப் பத்திரிகையின் முதற்றொகுதியில் முதற்பகுதியைக் கண்ணுற்றோம். அதன் உள்ளுறைகளிவன:— பத்திராசிரியர் எழுதிய முகவுரையும், வி. கனகசபைப்பிள்ளையவர்கள் பி.ஏ., பி.எல்., எழுதிய "சோழ சக்கிரவர்த்திகள்" என்பதும், வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள். பி.ஏ., எழுதிய "உயர்தனிச் செம்மொழி" என்பதும், பண்டிதர் ச. ம. நடேசசாஸ்திரிகள், பி.ஏ, எழுதிய "புராதன சரித்திர விஷய"மும். தி. ஈ. ஸ்ரீனிவாசாசாரியரவர்கள் மொழி பெயர்த்த "பிராதப ருத்ரீயமு"ம் எஸ். நாராயணசாமி ஐயரவர்கள். பி.ஏ., எழுதிய "தருக்க சாஸ்திர" மென்பதும், அ. சண்முகம் பிள்ளையவர்கள் எழுதிய "நூண்பொருட் கோவை" என்பதும், பத்திராசிரியர் செய்துள வாராய்ச்சியுமாம். இனி இப்பகுதியி னிறுதியில் மாறன்பொறையனாரியற்றிய "ஐந்திணையைம்பது" எனுஞ் சங்கச்செய்யுளும், குணவீர பண்டிதரியற்றிய "நேமிநாதம்" என்னுஞ் சிற்றிலக்கணமும், தனித்தனி எட்டெட்டுப் பக்கங்களாக உரையுடன் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. இவை இப்பகுதியிலே முடியாமையின் பிற்பகுதிகளிலும் அச்சாகிவரும். இது தமிழ்ச்சங்க முத்திராசாலையிற் பதிப்பிக்கப்பட்டது. 68 பக்கங்கள் கொண்டது. பதிப்புக் கண்கவர் வனப்பினதா யிருக்கின்றது. இதன் சந்தா வருஷ மொன்றுக்கு ரூபா நான்கே. தனிப்பிரதியின் விலை அணா 8 ஆம். தமிழபிமானிகளாவார் யாவரும் இச்செந்தமிழ்ப் பத்திரிகையைப் பெற்று மகிழ்வாராக.